# வள்ளலார்

சுந்தர பாண்டியன்



வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்
வாடியவர். எளியவர்களின் பசிப்பிணியைப்
போக்கிய வள்ளல்.



# பொருளடக்கம்




# ராமலிங்கம்

**உ**ண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இம்மூன்றும் முக்கியம் மனிதர்க்கு என்பார்கள். உடையின்றி ஒளிந்து வாழ்ந்து விடலாம் (அல்லது) ஆதி மனிதன் போல இலைகளையும் தழைகளையும் இழுத்துக் கட்டிக் கொள்ளலாம். வசிக்க வீடில்லாதபோது சத்திரமோ, சாவடியோ சாய்ந்து கொள்ளலாம் (அல்லது) ஆதி மனிதன் போல கிளைகளிலோ, குகைகளிலோ ஒண்டிக் கொள்ளலாம். ஆனால் உயிர் வாழ, உடல் வளர உணவு வேண்டும். காய்களையோ, கனிகளையோ, கிழங்குகளையோ எதையாவது தின்று வயிறு நிரப்பினால்தான் உயிர் வாழ முடியும். இந்த உண்மையை உணர்ந்தவர் வள்ளலார். அதை உலகத்துக்கும் உணர்த்தியவர்.

‘வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய’ அவர் சத்திய தருமச் சாலை அமைத்து, அன்று ஏற்றிய சுடர் இன்றும் எரிகிறது. அணையா அடுப்பாக. என்றும் எரியும்.

அருட்பெருஞ்சோதியின் இன்னொரு வடிவம்தான் அந்த அணையா அடுப்பு.

வாணிகம் செய்ய வந்த ஆங்கிலேயர்கள் ஆட்சியாளர் களாய் அரசேறிய பத்தொன்பதாம் நூற்றாண்டு. ஆங்காங்கே சிறுசிறு ஜமீன்கள் ஆங்கிலேயர்களின் அதிகார அடிமைகளாக அரசாண்ட நேரம். தமிழகத்தின் நடுநாட்டுப் பகுதியான சிதம்பரத்துக்கும் வடலூருக்கும் நடுவில் உள்ள மருதூர் எனும் சிற்றூரில் ராமைய்யா பிள்ளைக்கும் சின்னம்மைக்கும் ஐந்தாவது பிள்ளையாகப் பிறந்தான் ‘ராமலிங்கம்’. பின்னாள்களில் ‘ராமலிங்க அடிகளார்’. என்றும் ‘திருவருட்பிரகாச வள்ளலார்’ என்றும் ‘வள்ளல் பெருமான்’ என்றும் அழைக்கப்பட்டவர்தான் இந்த ராமலிங்கம்.

செல்வச் செழிப்பும், மண் செழிப்பும் நிறைந்த ஊர் மருதூர். காவிரியின் கடைமடைப் பகுதியான இங்கு வேளாண்மை செழித்து விளங்கியது. மருதூரும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் ஜமீனின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. ஊரில் உள்ள பிள்ளைகளுக்கு எழுத்தறிவிக்கும் ஆசானாக இருந்தார் ராமைய்யா பிள்ளை. உணவில் சுத்த சைவர். கருணீகர் குலத்தில் பிறந்தவர். கிராமக் கணக்குகளை எழுதி வந்தார்.

இவரது மனைவி சின்னம்மாள் திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள பொன்னேரியை அடுத்த சின்னக்காவனம் என்னும் சிற்றூரில் பிறந்தவர். ராமையாவுக்கு ஆறாவது மனைவியாக வாழ்க்கைப்பட்டவர். ஐந்து மனைவியரும் மகப்பேரின்றி ஒருவர்பின் ஒருவராக இறந்துபோக, ஆறாவதாக அவரை மணமுடித்தார் ராமையா.

இவர்களுக்கு சபாபதி, பரசுராமன் என்ற இரு ஆண் மக்களும், சுந்தரம், உண்ணாமுலை என இரு பெண் மக்களும் பிறந்தனர்.

ஒரு நாள் உச்சிப் பொழுதில் சிவனடியார் ஒருவர் களைத்த

தோற்றத்துடன் 'அம்மையே, அடியார்க்கு சாப்பிட உணவு வேண்டும்' என்றபடி வாசலில் வந்து நின்றார். அவரை வணங்கி உள்ளே அழைத்துவந்து ஆசனத்தில் அமர வைத்தார் சின்னம்மை. அறுசுவை உணவைத் தயார் செய்து பரிமாறினார்.

சாப்பிட்டு முடித்து சற்றுநேரம் களைப்பாறிய சிவனடியார் சின்னம்மையை அழைத்தார். 'அம்மையே, எம்.பசிப்பிணி போக்கினை! நானிலத்தின் பசியெல்லாம் போக்கவல்ல நல்லதொரு ஆண்மகவை விரைவில் பெறுவாய்' என்று ஆசிர்வதித்து, திருநீறு கொடுத்துச்சென்றார். சின்னம்மை. கணவர் வீடு திரும்பியதும் அவரிடம் இதைச் சொன்னார். அந்தச் சிவனடியாரைத் தன்னால் தரிசிக்க முடியவில்லையே என ராமையா மனம் வருந்தினார்.

சின்னம்மை கருவுற்றார். பேறு காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. அமாவாசை கடந்தது. ராமைய்யாவும் அவரது மனைவியும் தங்களுடைய ஐந்தாவது பிள்ளையை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருந்தனர்.

கி.பி.1823 அக்டோபர் மாதம் 5-ம் தேதி, ஞாயிறு மாலை 5.30 மணிக்கு அகன்ற விழிகளும் கூரிய நாசியும் கொண்ட அந்தக் குழந்தை பிறந்தது. குழந்தைக்கு 'ராமலிங்கம்' எனப் பெயரிட்டார்கள்.

சிவயோகியின் ஆசியால் பிறந்த பிள்ளையுடன் ஒரு நாள், தில்லை சிவன் சன்னதியில் நின்றனர். குழந்தை பிறந்து அப்போது ஐந்து மாதங்கள்தான் ஆகியிருந்தன.

தில்லைக்குச் சென்று வந்த சில வாரங்களிலேயே ராமைய்யா பிள்ளை திடீரென காலமானார். ராமலிங்கம் பிறந்த ஆறாம் மாதத்தின் கடைசி நாள்கள் அவை. அவரின் மறைவு குடும்பத்தில் எல்லோரையும் வாட்டியெடுத்தது. சின்னம்மையும் பிள்ளைகளும் அழுது புலம்பினர். பின், கடவுளின் விளையாட்டு எனக் கருதி தெளிவடைந்தனர். செய்ய வேண்டிய காரியங்கள் அனைத்தையும் செய்தனர்.

ராமைய்யா பிள்ளைக்கு சமாதி ஒன்றைச் செய்து வைத்து, மோட்சதீபம் ஏற்றினர்.

ராமய்யா பிள்ளையின் மரணத்துக்குப் பின் அவர் குடும்பத்தாரால் மருதூரில் இருக்க முடியவில்லை. இரண்டு மாதங்கள் சென்றதும் சின்னம்மையின் பெற்றோர் அளரான பொன்னேரிக்கு அருகில் உள்ள சின்னக்காவனத்துக்கு சென்று, பாட்டி வீட்டில் தஞ்சம் புகுந்தனர்.




# ஏழுகிணறு 38-ம் எண் வீடு

**மூ**த்த மகனான சபாபதி, நிறையப் படித்து, குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும் என விரும்பினார். ஆனால் அந்தச் சிறிய கிராமத்தில் அதற்கெல்லாம் வாய்ப்பும், வசதியும் இல்லை. கல்விக்கும் வேலைக்கும் உகந்த ஊர் சென்னைதான். இதை உணர்ந்து, குடும்பத்தாருடன் சென்னைக்கு குடிபெயர்ந்தார் சபாபதிபிள்ளை.

வாணிபம் செய்ய வந்த வெள்ளைக் காரர்களின் வளர்ச்சியைப் போலவே சென்னை நகரமும் வளர்ந்து கொண்டிருந்த காலம் அது. 1824-ல் சென்னைப் பட்டணம் வந்து சேர்ந்தது சபாபதியின் குடும்பமும். ஏழு கிணறு பகுதியிலுள்ள வீராசாமி தெருவில், 38-ஆம் எண் வீட்டில் குடியேறினர். அங்கே, நெரிசலும், சந்தடியும் அன்றைக்கும் காணப்பட்டது. அதனாலேயே சில ஆண்டுகள் கழித்து, இந்தச் சூழலை ஒதுக்கி, கடலோரமாக இருந்த திருவொற்றியூர் பகுதியில் வாழ்ந்தார் வள்ளலார். சென்னைக்கு வந்தவுடன் மகாவித்வான் காஞ்சிபுரம் சபாபதி

முதலியார் என்ற புலவரிடம் கல்வி கற்கச் சென்றார் சபாபதி பிள்ளை. அவருடைய தம்பி பரசுராமனும் அவருடன் சென்றார். புராணப் பிரசங்கம் செய்து பிழைப்பு நடத்த எண்ணினார் சபாபதிபிள்ளை. அதற்குச் சரியான நபரைத்தான் தன்னுடைய ஆசிரியராக தேர்ந்தெடுத்திருந்தார்.

சபாபதி முதலியார் பெரிய பண்டிதர். என்றாலும் பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம், காஞ்சி புராணம், திருவாரூர் தல புராணம் முதலிய சைவ நூல்களில் தனிப்பட்ட தேர்ச்சி இருந்தது அவருக்கு. காஞ்சியில் பச்சையப்ப முதலியார் பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தவர் என்பதால் நிர்வாகத்திறனிலும் ஆற்றல் பெற்றவராக அவர் இருந்தார். பின்னாள்களில் சென்னை பச்சையப்பன் கல்லூரியிலும் தமிழ்ப் புலவராக இருந்தார். பழைய முறையில் பாடம் சொல்லித்தருவதில் வல்லவரான சபாபதி முதலியார், புதிய முறை பள்ளிக் கல்வியையும் கற்பிக்கும் திறன் பெற்றிருந்தார்.

படிப்பை முடித்துப் ‘புலவர்’ ஆனார் சபாபதி. புராணப் பிரசங்கங்கள் செய்துவந்தார். பாரம்பரியமான மத நம்பிக்கையில் ஊறியிருந்த குடும்பத்தில் வந்தவர் என்பதால் என்பதால், ஆங்கிலம் பயிலவேண்டும், வெள்ளைக்காரர்களின் துணையுடன் முன்னுக்கு வரவேண்டும் என்றெல்லாம் தோன்றவில்லை சபாபதிக்கு. தன்னைப் போலவே தன் தம்பியும் சமயம் சார்ந்த தமிழ்க் கல்வியைப் பயின்று குடும்பத்துக்கு உதவ வேண்டும் என்று எதிர்பார்த்தார்.

ஐந்து வயதை ராமலிங்கம் அடைந்தபோது, அண்ணன் சபாபதியே தம்பிக்கு பாடம் கற்பிக்கத் தொடங்கினார். அந்தக்கால கல்வி முறைப்படி திவாகரம், சதகம், அந்தாதி போன்றவற்றை சொல்லிக் கொடுத்தார். இயல்பாகவே பெரியவர்கள் மீது மரியாதையும், மதிப்பும் கொண்டவர் ராமலிங்கம். தந்தை ஸ்தானத்தில் இருந்த தமையனுக்கு மிகுந்த மரியாதை கொடுத்து, கற்றுக் கொள்ள

வேண்டியவைகளைக் கற்றுக் கொண்டார்.

காலம் செல்லச் செல்ல தம்பியின் மனது பாடத்தில் நிலை கொள்ளவில்லை என்பதை அண்ணன் அறிந்து கொண்டார். தன்னுடைய ஆசிரியர் மகாவித்வான் சபாபதி முதலியாரிடம் சேர்த்தால், தம்பியும் பாடத்தில் நாட்டம் கொள்வான் என்று அவர் நினைத்தார். தம்பியை சபாபதி முதலியாரிடம் அழைத்துப் போனார்.

சபாபதி முதலியார் மாணவர்களைக் கவனிப்பதில் கெட்டிக்காரர். கொஞ்சம் புலனாய்வும் செய்யக் கூடியவர். அவர் ராமலிங்கத்துக்கு நான்கைந்து நாள்கள் பாடம் சொல்லிக் கொடுத்தார்.

ராமலிங்கத்தின் மனநிலை ஒருநிலையில் இல்லை என்பதை உணர்ந்தார். சக மாணவர்களிடம் ராமலிங்கத்தை வேவு பார்க்கச் சொன்னார். ‘நாள்தோறும் கந்தசாமி கோயிலுக்குச் சென்று உருகி நிற்கிறான். கந்தனைப் பார்த்து கவிதை மழை பொழிகிறான்.’ ராமலிங்கத்தைப் பின் தொடர்ந்த மாணவர்கள் சொன்னார்கள்.

ஆசான் ராமலிங்கத்தின் உள்ளத்தில் உள்ளதை உணர்ந்து கொண்டார். அதற்குப் பிறகு ராமலிங்கத்துக்குப் பாடம் சொல்லித் தராமலேயே தட்டிக் கழித்தார். அண்ணன் சபாபதிக்கு சந்தேகம் வந்தது. ‘மகாவித்வான் தம்பிக்கு பாடம் சொல்லிக் கொடுக்காமல் நிராகரிப்பதற்கு என்ன காரணம்? தம்பியின் நடத்தையில் ஏதாவது குறை இருக்குமோ? அவர் என்னையும் தவறாகத்தானே நினைப்பார்?’ என்றெல்லாம் மனம் குமுறினார்.

அண்ணனுக்குத் தன் போக்குகள், தன் செய்கைகள் புரியவில்லை, பிடிக்கவில்லை என்பதை உணர்ந்த ராமலிங்கம் அண்ணனை நேரடியாகச் சந்திப்பதைத் தவிர்த்தார். அவர் இல்லாத நேரமாகப் பார்த்து வீட்டுக்கு வருவார். அண்ணி போடும் உணவைச் சாப்பிட்டுவிட்டுப் போவார். ஆரம்பத்தில் அண்ணனும் இதைக் கண்டும்

காணாதது போலத்தான் இருந்தார். ஆனால் ஒரு கட்டத்தில் அவரால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

‘எதையும் செய்யாமல், எதுபற்றியும் சொல்லாமல் திரியும் அவனுக்கு சாப்பாடு போடாதே’ என்று மனைவியிடம் சொல்லிவிட்டார்.

இத்தகைய சூழலில் வீட்டில் நடந்தது ஒரு திவசம். எல்லா காரியமும் முடிந்தது. சாப்பாடும் முடிந்து எல்லோரும் சென்றுவிட்டார்கள். அதற்குப் பிறகு வந்தார் ராமலிங்கம். யாருக்கும் தெரியாமல் திருடனைப் போல் வந்து சாப்பிட அமர்ந்தார். இதைப் பார்த்துத் துடித்துப் போனார் அண்ணி. ‘அண்ணன் சொல்வது போல நடந்து கொள்ளக் கூடாதா?’ என்று ஆதங்கத்துடன் கேட்டார்.

அண்ணனின் எதிர்பார்ப்புக்கேற்ப நடக்க ராமலிங்கம் அது வரை எந்த நடவடிக்கையும் எடுத்ததில்லை. தம்பிக்கு புரியும்படி தன்னுடைய எண்ணத்தை எடுத்துரைக்க அவருடைய அண்ணனாலும் முடிந்ததில்லை. அண்ணியோ அன்பின் உணர்ச்சியால், உரிமையால் கேட்டுவிட்டாள்.

ராமலிங்கம் எழுந்தார். பூஜை பொருள்களுடன், ஒரு கண்ணாடியும் எடுத்துக் கொண்டு மாடி அறைக்குப் போனார். தியானம் செய்யத் தொடங்கினார். மற்றவர்கள் தன் பொருட்டு வருந்தக் கூடாது என்கிற உயரிய எண்ணம் அப்போதே ஏற்பட்டிருந்தது ராமலிங்கத்துக்கு.

அதற்குப் பிறகு ராமலிங்கத்தின் நடவடிக்கைகளில் மாற்றம் ஏற்பட்டது. அண்ணனும் தம்பியும் ஒரே சமய மேடைகளில் தோன்றினர். 1830-ம் ஆண்டின் முதல் பாதியில் தமிழ் நூல்கள் அரிதிலும் அரிதாகவே அச்சில் வந்து கொண்டிருந்தன. இன்றைக்கு உள்ளது போல எல்லோருக்கும் கிடைக்கும்படியான மூல நூல்கள் அப்போது இல்லை. எனவே பாடல்களைத் தெளிவாகப் படித்துக் காட்டி பொருள் சொல்ல வேண்டிய நிலை. அண்ணன் செய்யும் புராணப் பிரசங்கத்தில், ஏட்டுச் சுவடிகளை எடுத்துச் சென்று

சொற்பொழிவுக்கு இடையில் பாடல்களைப் படிப்பதுதான் ராமலிங்கத்தின் முக்கியமான வேலை.




# கடுக்கனும் திருடனும்

**சோ** மு செட்டியார் செல்வந்தர். சைவப் பற்றும் ஆன்மிக நாட்டமும் அதிகமுள்ளவர். அன்றைக்கு அவரது வீட்டில்தான் பிரசங்கம். சபாபதிக்கு உடம்பு முடியாமல் போக, நிகழ்ச்சிக்குத் தடங்கல் ஏற்பட்டுவிடக் கூடாதே என்று இரண்டொரு பாடல்களை மட்டும் பாடி வரச் சொல்லி ராமலிங்கத்தை அனுப்பினார்.

அமுதகுரலில் அனுபவித்து பாட்டைப் பாடினார் ராமலிங்கம். கேட்க வந்தவர்கள் உருகிப்போனார்கள். இந்தச் சிறுவனுக்குள்ளா இத்தனை ஞானம், எத்தனை அழகாய் பாடல் படிக்கிறது இந்தப் பிள்ளை! எல்லோரும் வியந்துபோனார்கள். அன்பர்கள் பலர் சபாபதியிடம் வந்து சொன்னார்கள். ஆச்சரியப்பட்டார் சபாபதி. அடுத்த நாளும் ராமலிங்கத்தை அனுப்பிவைத்தார். அவரும் ராமலிங்கத்துக்குத் தெரியாமல் வந்து கேட்டார். தம்பி பிரசங்கம் செய்யும் அற்புதத்தைப் பார்த்து அசந்துபோனார்.

படிக்காதவன், ஊர்சுற்றி, சோம்பேறி, சோறுபோடாதே என்றெல்லாம் திட்டித் தீர்த்தவர் அகமகிழ்ந்து பூரித்து நின்றார். திறமைக்கு வயது ஏது? திறமை எங்கிருந்தாலும் தலை வணங்கித் தானே ஆகவேண்டும். அண்ணன் தரும் மரியாதை ராமலிங்கத்துக்குச் சங்கடமாக இருந்தது. தனக்கு மூத்தவர் தன்னிடம் பணிவதா? குடும்பத்தாரின் பணிவும், பண்பும் நெருடலாக இருக்கிறது. வீட்டில் இருக்காமல் வெளியே கிளம்புகிறார் ராமலிங்கம். அன்பும் கருணையும் கொண்ட புதிய ஆன்மிகத்துக்கு அலைகிறது மனம்.

பார்க் டவுன் என்று இப்போது அழைக்கப்படும் பகுதியில், ராசப்ப செட்டித் தெருவில் உள்ள கந்த கோட்ட வளாகம் 17-வது நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஒரு பூந்தோட்டமாக இருந்தது. அப்போது அது முத்தியாலு நாயக்கர் என்பவருக்கு உரிமையானதாக இருந்தது. அந்தத் தோட்டத்தில் கந்தப்ப ஆச்சாரி என்பவர் ஒரு சர்வசித்தி விநாயகர் கோயிலைக் கட்டினார். அவர் அதற்கு நாள்தோறும் பூஜை செய்து வந்ததால், அந்தப் பகுதி மக்கள் அவரை ‘கந்தப் பண்டாரம்’ என்று அழைத்து வந்தனர். கந்தப் பண்டாரத்துக்கு வேலூர் மாரிச்செட்டியார் என்பவர் நண்பரானார். அவருடைய உதவியால் கோயில் பூஜைகள் சிறப்பாக நடந்து வந்தன.

மாதந்தோறும் கிருத்திகையில் சென்னைக்கு தெற்கே 56 கிலோமீட்டர் தூரத்திலுள்ள திருப்போரூருக்குச் சென்று வழிபடுவதை இருவரும் வழக்கமாக வைத்திருந்தனர். ஒரு நாள் கடுமையான வெயில். இருவரும் வெயிலைத் தாங்கமுடியாமல் திருப்போரூர் அருகே ஒரு வேப்பமர நிழலில் படுத்து இளைப்பாறினார்கள். அப்படியே உறங்கி விட்டார்கள். வேப்பமரப் புற்றிலிருந்த முருகன் மாரிச் செட்டியாரின் கனவில் தோன்றினார். தாம் அந்தப் புற்றுக்கு வந்த வரலாறைக் கூறினார்.

பாளையக்காரர்களுக்கும் மராட்டியர்களுக்கும் அடிக்கடிப் போர் மூண்டு அரசியல் சூழ்நிலை மோசமாக இருந்த காலம். இதைப் பயன்படுத்திக் கொண்டு கொள்ளையர்கள் கோயில்களைச் சூறையாடினர். இதற்குப் பயந்து

திருப்போரூர் கோயிலின் மூலவர் மறைக்கப்பட்டு வேறு மூலவர் அமைக்கப்பட்டார். மறைக்கப்பட்ட மூலவர்தான் பாம்புப் புற்றிலிருந்து மாரி செட்டியாரின் கனவில் வந்ததாகக் கூறப்பட்டது.

துங்கியெழுந்த மாரிசெட்டியார், புற்றிலிருந்து வெளிவந்த முருகனை கந்த பண்டாரத்துடன் தரிசனம் செய்தார். பிறகு இருவரும் கந்தனை, சென்னையில் அவர்கள் வழிபட்டு வந்த விநாயகர் ஆலயத்துக்குக் கொண்டுவந்தார்கள்.

இந்த கந்தக் கோட்டத்திலுள்ள முருகனை தரிசிக்கத்தான் ஒன்பது வயது ராமலிங்கம் வந்தார். முருகனைப் போற்றி முப்பத்தியொரு விருத்தங்கள் கொண்ட தெய்வமணி மாலையைப் பாடினார்.

புண்ணிய செயல்கள் ஓங்கட்டும்!

செல்வம் நல்லவர்களிடம் ஓங்கட்டும்!

அறிவு தழைத்து ஓங்கட்டும்!

நிறைவான இன்பம் ஓங்கட்டும்

கந்தனின் இன்பம் ஓங்கட்டும்

அவனுடைய அமுதஒளிவடிவம் உள்ளத்தில் ஓங்கட்டும்!

என்று பலப்பல பாடல்கள். கவியருவியாக. முருகனுக்காக. மக்களுக்காக.

சென்னைக்கு மேற்கே 80 கி.மீ தொலைவில் உள்ளது திருத்தணி. கடல் மட்டத்திலிருந்து 700 அடி உயரம் உள்ள குன்றின் மீது சுப்பிரமணியசுவாமி கோயில். சூரனைக் கொன்றபின் சினம் தணிந்து, வள்ளியை மணந்த இடம்.

ஆரம்ப காலத்தில் ராமலிங்கம் திருத்தணிகைக்குச் சென்று வழிபடாமல் சென்னையிலிருந்தே தணிகை முருகனை வணங்கி வந்திருக்கிறார். சில ஆண்டுகளுக்குப் பிறகு, பலமுறை திருத்தணிக்குச் சென்று நூற்றுக்கணக்கான

பாடல்களை தணிகை முருகன் மீது பாடினார்.

ஒருமுறை தணிகை மலைக்குச் சென்றிருந்தபோது நடந்தது அந்தச் சம்பவம். ராமலிங்கத்துக்கு தாகம். கடுமையான தாகம். நீர் மொண்டு குடிக்கக் கலயம் இல்லை. அதை வாங்கக் காசும் இல்லை. தவிக்கிறார். யாரும் பசியால் வாடக்கூடாது என்று அவர் நினைத்ததற்கு இது போன்ற சொந்த அனுபவங்களும் காரணமாக இருக்கலாம். பிறகு எப்படியோ யாரிடமோ ஒரு குவளையை வாங்கி நீர் அருந்தி தாகம் தீர்த்தார் ராமலிங்கம்.

திருத்தணிகையில் சில சமயம் திருவருட்பிரகாசம் தெய்வச்சுவாலையாக சுடர்விடும். அது பேரின்ப வெள்ளமாக பொங்கித் ததும்பும்.

மலை மீதிருக்கும் தணிகை முருகனைத் தரிசிக்க ஒருமுறை பாமரர்களுடன் கும்மியடித்தபடி பரவசத்துடன் சென்ற அனுபவமும் ராமலிங்கத்துக்கு உண்டு.

ஆசையும் மீசையும் முளைவிடும் பருவவயது பன்னிரெண்டு. ராமலிங்கத்துக்கு உள்ளும் புறமும் ஆன்மிக ஜோதி புகுந்து கொண்டிருந்தது. கல்வியில் ஆசையில்லாமல் போன அவருக்கு பொருள் சம்பாதிக்கும் நாட்டமும் இல்லாமல் போனது. உடலையும் உடல் சுகத்தையும் பேணுவதற்குத்தானே இந்தப் பொருள் தேடல்? ஓட்டைப் படகு போல் உள்ள இந்த ஒன்பது வாயில் வீட்டுக்கா இவ்வளவு ஆடம்பரமும் பகட்டும்? மனம் வேறு தேடலில் சிறகடித்தது.

ஆன்மிகத் தேடல் அதிகரிக்கத் தொடங்கியவுடன் அடிக்கடி திருவொற்றியூர் நோக்கிசெல்ல ஆரம்பித்தார் ராமலிங்கம். ஆதிபுரீஸ்வரர், படம் பக்கநாதர், மாணிக்க தியாகர், எழுத்தறியும் பெருமாள், புற்றிடங்கொண்டார் என திருவொற்றியூர் தியாகராஜ சுவாமிக்கு பல பெயர்கள். அப்பர், ஞானசம்பந்தர் போன்ற ஆன்மிக ஞானிகள் வழிபட்ட இடம். பட்டினத்து அடிகள் சித்தியடைந்த இடம். சிவனடியார்கள் சிறந்தோங்கிய தலம்.

ராமலிங்கம் கோயிலுக்குள் நுழைவதும் தெரியாது, வழிபடுவதும் தெரியாது, வெளியேறுவதும் தெரியாது. அப்படி ஒரு அடக்கம், அமைதி. தியாகராஜ சுவாமிக்கு முன் நின்று திருவாசகத்தை மெல்ல ஓதியபடி, உணர்ச்சிப் பிழம்பாவார். திருவாசகமும் தேவாரமும் அவரது வழிபாட்டு மந்திரங்கள். அவரைப் பரவச நிலைக்கு இட்டுச் செல்பவை.

திருவொற்றியூரில் தியாகராஜரின் மூலஸ்தானத்தை வலம் வரும்போது பிரகாரத்தில் உள்ள சுப்பிரமணிய சுவாமிக்கு எதிரே நின்று நெடுநேரம் தியானத்தில் இருப்பார் ராமலிங்கம். திருவொற்றியூர் முருகன் அவருக்குத் திருத்தணிகை முருகனாகத் தெரிவார்.

ஒரு நாள் இரவு ராமலிங்கம், திருவொற்றியூர் சத்திரத்தில் படுத்துக் கொண்டிருந்தார். ஒரு திருடன் அவரருகில் வந்தான். அவர் தூங்குவதாக நினைத்து, மெதுவாக அவருடைய வலக்காதில் உள்ள கடுக்கனைக் கழற்றினான். அந்தத் திருடனின் மேல் இரக்கம் கொண்டார் ராமலிங்கம். ஒரு கடுக்கனை வைத்து அவன் என்ன செய்வான் என்று நினைத்து வருத்தப்பட்டார்.

தூங்குவது போல மறுபுறம் புரண்டுபடுத்தார். இடக்காதில் இருந்த கடுக்கன் திருடனின் கண்களில்பட்டது. அதையும் கழற்றிக்கொண்டு ஓடினான் திருடன். தன்னைச் சோதிப்பதற்காக ஆண்டவனே திருடன் வடிவில் வந்ததாக நினைத்துக் கொண்டார் ராமலிங்கம்.

ஒருமுறை அவர் திருவொற்றியூரிலிருந்து வீட்டுக்குத் திரும்ப நள்ளிரவுக்கு மேல் ஆகிவிட்டது. வீடு அடைத்திருந்தது. எல்லோரும் தூங்கியிருப்பார்கள், கதவைத் தட்டி அவர்கள் தூக்கத்தைக் கலைப்பானேன் என்று நினைத்தவர் திண்ணையிலேயே படுத்துவிட்டார். பசி குடலைப் புரட்டியது. அதையும் தாண்டி களைப்பு. என்னதான் செய்வது? அப்போது திருவொற்றியூர் வடிவுடைநாயகி அம்மன் அவர் முன் தோன்றினாள். அவருக்கு தாமரை இலையில் வெண்பொங்கலைக் கொடுத்துவிட்டு

மறைந்தாள்.

“ஒற்றியிற்போய் பசித்தனையோ என்று எனை அங்கெழுப்பி
உவந்துகொடுத்து அருளிய என் உயிர்க்கு இனிதாந் தாயே!”

என அருட்பாவில் இதைக் குறிப்பிடுகிறார் ராமலிங்க அடிகளார்.




# இலக்கண மடல்

**ரா** மலிங்கம் திருவொற்றியூர் செல்லும்போது சில சமயங்களில் அன்பர்களையும் தன்னுடன் அழைத்துச் செல்வது உண்டு. அப்படி ஒருமுறை சென்றபோது பெருமழை பிடித்துக் கொண்டது. எல்லோரும் இதைக் கடந்து எப்படிப் போவது என்று தவித்துப்போனார்கள். ராமலிங்கம் ஒரு சந்தை நோக்கிக் கையை நீட்டினார். ‘வாருங்கள்! எல்லோரும் இந்த வழியாகப் போய் விடலாம்’ என்றார். நொடிப்பொழுதில் திருவொற்றியூருக்கு எல்லோரும் சென்று சேர்ந்துவிட்டார்கள்.

வள்ளலார் தாம் வாழ்ந்த காலத்தில் பல நல்ல கருத்துகளைக் கொண்டிருந்தார். ‘மாணவர்களை அடிக்கக் கூடாது’ என்று இப்போது சொல்கிறோம். அவர் அதை அப்போதே வலியுறுத்தினார். தன்னுடைய உறவினரான பொன்னேரி சுந்தரம் பிள்ளை என்பவர் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது பிள்ளைகளை அடிப்பதாகக் கேள்விப் பட்டார்.

‘கல்வி மீது நாட்டம் கொண்டவன் நீ…

………………………………………….

தூய்மையான மனம் கொண்டவன் நீ…

என்னுடைய தோழன் நீ…

நீ போய் சிறுவர்களை அடிக்கலாமா…

கூடாது…. இது என் மேல் ஆணை…’

என்றெழுதி அனுப்பினார். ‘படிப்பது நன்றெனத் தெரிந்த பாங்குடையாய்’ எனத் தொடங்கும் பாடல் அது.

சென்னையில் சபாபதி முதலியார் என்பவர் இருந்தார். அவர் தன் வீட்டில் நிகழும் திருமணத்துக்கு அவசியம் வரவேண்டுமென்று அழைத்தார். வள்ளலாரும் அங்கு சென்றார். வீட்டு வாசலில் சேவகன் ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவன், தலைப்பாகையும் சட்டையும் அணிந்து வந்தவர்களை மட்டும் உள்ளே அனுப்பிக் கொண்டிருந்தான். இதைப் பார்த்ததும் அவருக்கு தலைப்பாகை இல்லாமல் செல்பவர்களை அனுமதிக்க மாட்டார்களோ என்கிற ஐயம் எழுந்தது. எதிர்வீட்டுத் திண்ணையில் போய் அமர்ந்தார். திண்ணை வீட்டுக்காரர் திருமண வீட்டாரிடம் போய், வள்ளலார் வந்திருக்கும் தகவலைச் சொன்னார். அவரிடம் ஓடோடி வந்தார்கள் திருமண வீட்டார். அவர்களிடம் ‘அலங்கார உடைகள் இல்லாதவர்கள் திருமணத்துக்குச் செல்ல நினைக்கக் கூடாது’ என்ற பொருள்பட

‘சோடில்லைமேல் வெள்ளைச் சொக்காயில்லை நல்ல சோமனில்லைப்

பாடில்லை கையிற்பணமில்லை தேகப் பருமனில்லை

வீடில்லை யாதொரு வீறாப்புமில்லை விவாகமது

நாடில்லை நீநெஞ்ச மேயெந்த வாற்றினிடு எண்ணினையே’

என்ற பாடலைப் பாடினார். வள்ளலார் பெரும் கவிஞர்.

பிரிட்டிஷ் கம்பெனியின் பிடியில் இந்தியா முழுவதும் சிக்கிவிட்ட நிலையில் ரயில்வண்டி, தபால்தந்தி, அச்சு எந்திரம் போன்ற புதிய வசதிகள் ஏற்பட்டன. கிறிஸ்துவ மதப் பிரச்சார நூல்கள் வெளிவந்ததைப் பார்த்த பிற மதத்தினருக்கும் தங்கள் நூல்களை வெளியிட ஆர்வமும் உற்சாகமும் ஏற்பட்டது. பழைய கல்வி முறைகள் மாறி பள்ளிகளும், கல்லூரிகளும் தொடங்கப்பட்டிருந்தன. கல்வி அறிவு பரவலாகப் பரவியிருந்த சூழல். அது இலக்கியம் வளர்வதற்கும் ஏதுவாக இருந்தது.

வள்ளலாரிடம் முதல் மாணவராகச் சேர்ந்தவர் தொழுவூர் வேலாயுத முதலியார். வேலாயுதத்தின் தந்தையின் நண்பர்களுள் ஒருவரான காளவாய் குப்பண்ண முதலியார் வேலாயுதத்தை ராமலிங்கத்திடம் அழைத்து வந்து சேர்த்தார். 1849-ல் ராமலிங்கம் புலமையும், கவிப் பெருக்கும் உள்ள ஒரு ஆன்மிகவாதியாக ‘சிதம்பரம் ராமலிங்கம்’ என்று அறியப்பட்டிருந்தார். அப்போது ராமலிங்கத்துக்கு வயது 26. தொழுதுர் வேலாயுதத்துக்கு 17.

இளம் ரத்தம், குறும்புகள் அதிகம். தமக்கு ஆசிரியராக வந்த சிதம்பரம் ராமலிங்கத்தின் அறிவாற்றலைச் சோதிக்க விரும்பினார் வேலாயுதம். ஒரு செய்யுளையும் அதற்கு ஐந்து வகை உரைகளையும் தாமே எழுதிக்கொண்டு வந்தார். ‘இதற்கு ஐந்து வகை உரை இருக்கின்றன’ என்றார். அதற்கு ராமலிங்கம் ‘ஐந்தா? இதற்கு ஒன்பது வகையாக பொருள் கூறலாமே!’ என்று சொல்லி, அந்த ஒன்பது வகைப் பொருளை விளக்கவும் செய்தார். ராமலிங்கத்தின் பேரறிவுத் திறனைக் கண்ட தொழுதூர் வேலாயுதம் அப்படியே அவர் காலில் விழுந்துவிட்டார். அவருடைய அணுக்கமான மாணவராகிவிட்டார்.

ஒருமுறை, ஊரில் சிறுவன் ஒருவன் காணாமல் போயிருந்தான். அவனது பெற்றோர் ராமலிங்கத்திடம் வந்தார்கள். அவரை மதுரையில் இருக்கும் ஒரு மடாலயத்துக்குக் கடிதம் ஒன்றை இது தொடர்பாக எழுதச் சொன்னார்கள். ராமலிங்கமும் ஒரு கடிதம் எழுதி மதுரைக்கு

அனுப்பினார்.

மதுரையில் இருந்த மடத்தில் திருச்சிற்றம்பல ஞானியார் என்ற பெரியவர் இருந்தார். அவர் ‘அவதானி’யான தேவிப்பட்டினம் முத்துசாமியிடம் பேசிக்கொண்டிருந்த போது அந்தக் கடிதம் வந்தது. கடிதத்தைப் படித்துப் பார்த்த ஞானியார் அதை அவதானி முத்துச்சாமியிடம் வாசித்துக் காட்டினார். ‘இவ்வளவு பெரிய மேதாவி எழுதிய கடிதத்தில் இலக்கிய, இலக்கணச் சிறப்புகள் எதுவுமில்லையே?’ என்றார் அவதானி.

ராமலிங்கத்தை நன்கு அறிந்திருந்தவர் ஞானியார். அவர் ‘வள்ளலார் பேசும்போதே இலக்கணம் சிந்தும்’ என்றார். ‘அப்படியானால் இலக்கணச் சிறப்புகளுடன் கூடிய ஒரு கடிதத்தை வரவழையுங்களேன்’ என்றார் அவதானியார். உடனே இதைச் சொல்லி ராமலிங்கத்துக்கு மடத்திலிருந்து ஒரு மடல் அனுப்பப்பட்டது.

பகட்டும் ஆடம்பரமும் ராமலிங்கத்துக்குப் பிடிக்காது. அவர் அந்தக் கடிதத்தைத் தூர எறிந்தார். உடனிருந்த தொழுதூர் வேலாயுதம் அக்கடிதத்தை எடுத்துப் படித்தார். விஷயத்தைப் புரிந்துகொண்டார். அதில் குறிப்பிட்டபடி, இலக்கண மடல் ஒன்றை அனுப்பித்தான் வையுங்களேன் என்று திரும்பத் திரும்ப கெஞ்சினார். மாணவர் மன்றாடியபிறகு மறுக்க முடியாத ராமலிங்கம், இலக்கண, இலக்கிய நயம் சேர்த்து ஒரு சிறிய மடலை எழுதினார். அதை மதுரை மடத்துக்கு அனுப்பச் சொன்னார்.

அந்தக் கடிதம் மடத்துக்கு வந்தது. அவதானியார் அதைப் படித்துப் பார்த்தார். ராமலிங்கத்தின் இலக்கியம் அவருக்கு விளங்கவில்லை. இருந்தாலும் பதிலளிக்கும் விதமாக அவதானியாரும் ஒரு செய்யுளை ராமலிங்கருக்கு அனுப்பி வைத்தார். அந்தச் செய்யுளுக்கு அவர் நினைத்த பொருள் ஒன்றையும், தத்துவார்த்தமான இன்னொரு அரிய உரையையும் அனுப்பினார் ராமலிங்கம். அவ்வளவுதான். அவதானியார் ஓடிவந்தார். ராமலிங்கத்தின் பாதம்

பணிந்தார். 'தங்களை வித்வான் என நினைத்தேன். பரிபூரண ஞானியென்று உணர்ந்து கொண்டேன்' என்றார்.

தமிழில் மட்டுமின்றி, சமஸ்கிருதத்திலும் புலமை பெற்றிருந்தார் வள்ளலார். அப்போதிருந்த சங்கராச்சாரி யார் ஒருமுறை சென்னைக்கு வந்திருந்தார். வடமொழி நூல் ஒன்றைப் படித்தபோது அவருக்கு சில ஐயங்கள் தோன்றின. அதைத் தெளிவித்துக் கொள்ள தகுந்த வித்வான்கள் யாராவது இருக்கிறார்களா என்று கேட்டிருக்கிறார். உடன் இருந்தவர்களில் ஓர் அந்தணர் வள்ளலாரைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

உடனே சங்கராச்சாரியார் வள்ளலாரைக் காண விரும்பி அவரை அழைத்துவரச் சொன்னார். வள்ளலாரும் தொழுதூர் வேலாயுத முதலியாரை அழைத்துக்கொண்டு சங்கராச்சாரியாரிடம் சென்றார். கொஞ்சநேரம் அளவளாவியபின் சங்கராச்சாரியார் வடமொழி நூலை வள்ளலாரிடம் கொடுத்தார். தமது ஐயங்களை விளக்கச் சொல்லி வேண்டினார். வள்ளலாரும் அந்நூலின் முக்கிய பகுதிகளை ஒரு முறை படித்துப் பார்த்தார். பிறகு அதை வேலாயுதனாரிடம் கொடுத்தார். 'நீர் சொல்லும்' என்றார். வேலாயுதனார் அந்தப்பகுதிக்கு விரிவான விளக்கமளித் தார். சங்கராச்சாரியாருக்கு இருந்த ஐயங்கள் தெளிந்தன. அவர் வள்ளலாரை வெகுவாகப் பாராட்டினார்.

இப்படி வேற்றுமொழி தெரிந்திருந்தாலும் தமிழே மிகச் சிறந்த மொழி என்பதில் வள்ளலார் தெளிவாக இருந்தார். புலவர்கள் தமிழைப் புரிந்து கொள்ள முடியாத மொழியாக ஆக்கியது போகட்டும். தமிழ் என்பதே 'இயற்கை உண்மை சிறப்பியல் மொழி' எனக் கூறி 'தமிழ்' என்னும் சொல்லுக்கு 'சுத்த சித்தாந்த' பத உரை வரைந்தார் வள்ளலார்.




# திருவாசகத் தேனிலவு

**வ** ள்ளலார் ஒரு பதிப்பாளரும்கூட. ‘ஒழிவிலொடுக்கம்’ எனும் நூலை 1851-லும், ‘தொண்டை மண்டல சதகம்’ எனும் நூலை 1855-லும், ‘சின்மய தீபிகை’ எனும் நூலை 1857-லும் அவர் பதிப்பித்தார்.

‘ஒழிவிலொடுக்கம்’ ஓர் அருமையான தத்துவ நூல். காழிக் கண்ணுடைய வள்ளலார் எழுதிய இந்நூலுக்கு திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் என்பவர் உரை எழுதினார். அந்த உரையுடனும் தான் எழுதிய சிறப்பாயிர விருத்தியுடனும் 1851-ல் முதன்முதலில் அதை அச்சில் பதிப்பித்தார் வள்ளலார். இந்நூலை பதிப்பிக்கும்போது அவருக்கு வயது 28.

‘தொண்ட மண்டல சதகம்’ தொண்டை மண்டலத்தின் சிறப்புகளைக் கூறும் நூல். செங்கல்பட்டு, வடஆற்காடு மாவட்டங்களும், தென் ஆற்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியும் சேர்ந்த நிலப்பரப்பு, பண்டைக் காலத்தில் ‘தொண்டை

மண்டலம்' என்று வழங்கப்பட்டது.

'தொண்ட மண்டலமா', 'தொண்டை மண்டலமா' என்று அப்போது ஒரு விவாதம் எழுந்தது. தொல்காப்பியத்தில் இருந்தும், கல்வெட்டிலிருந்தும் சான்று காட்டி 'தொண்ட மண்டலம்' என்பதுதான் சரி என்றார் வள்ளலார். தமிழ் நாட்டின் முதல் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் வள்ளலார் என்றுகூடச் சொல்லலாம். 16 பக்க 'நூற் பெயர் இலக்கண'த்துடன் தொண்டமண்டல சதகத்தைப் பதிப்பித்தவர் அவர். ஆனாலும் 'தொண்டை மண்டலம்' என்றுதான் வள்ளலாருக்கு முன்பும், பின்பும் வழங்கப்படுகிறது.

'சின்மய தீபிகை' எனும் தத்து நூலையும் அவர் பதிப்பித்து வெளியிட்டார்.

இக்காலக் கட்டத்தில் வள்ளலார் பலருக்கு ஆசிரியராக இருந்திருக்கிறார். தன் மாணாக்கர்களுடன் பல இடங்களுக்குச் சென்று சமயப்பேருரைகள் நிகழ்த்தியிருக்கிறார். அச்சுக்கு வந்த பல நூல்களுக்கு சாற்றுக்கவிகள், நூலைப் பற்றியும், நூலாசிரியரைப் பற்றியும் வரும் செய்யுள்களை எழுதியிருக்கிறார்.

உரைநடை நூல்கள் அரிதாக இருந்த அந்தக்காலத்தில் மனு நீதிசோழனின் வரலாறைச் சொல்லும் 'மனுமுறைகண்ட வாசகம்' எனும் உரைநடை நூலையும், 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' எனும் உரைநடை நூலையும் வள்ளலார் எழுதினார்.

வள்ளலாருக்கு திருமணம் செய்து வைக்க, அவரது தாயாரும், சகோதர, சகோதரிகளும் விரும்பினர். ஆனால் வள்ளலாரோ திருமணத்துக்கு ஒப்புக்கொள்ளவில்லை.

திருமணப் பருவமும் கடந்துகொண்டிருந்தது. உற்றாரும், உறவினர்களும் துறவி ஒருவரைக் கொண்டு அவருக்கு 'இல்லற உபதேசம்' செய்தார்கள். நீண்ட நெடிய நெருக்குதல்களுக்குப் பிறகு இறுதியாக வள்ளலார்

திருமணத்துக்கு ஒப்புக்கொண்டார்.

பால்ய விவாகம் நடைபெறும் அந்தக்காலத்தில் வள்ளலாருக்கு திருமணம் நடைபெற்றபோது அவருக்கு வயது இருபத்தியேழு. 1850-ல் அவருடைய அக்காள் உண்ணாமுலையின் மகளான தனம்மாளை ராமலிங்கர் திருமணம் செய்துகொண்டார்.

தொட்டுத் தாலி கட்டிவிட்டாரே தவிர அவர் இல்லற வாழ்க்கையில் ஈடுபடவில்லை. முதல் இரவில் வள்ளலார் கையில் திருவாசகப் புத்தகத்தோடு அறைக்குள் புகுந்தார். அறையில் மங்கலாக எரிந்து கொண்டிருந்த விளக்கைத் தூண்டிவிட்டார். விளக்குக்கு அடியில் அமர்ந்து, துணைவியார் தனக்கோடியம்மாளையும் அருகில் அமர்த்திக்கொண்டு, திருவாசகத்தை மெல்ல மெல்ல இனிமையாக ஓதத் தொடங்கினார். அம்மையாரும் சேர்ந்து திருவாசகத்தை ஓதினார். அறை முழுவதும் திருவாசக ஒளி, ஒலி பரவியது.

திருவாசக முற்றோதலே முதலிரவு முழுவதும் விடிய விடிய நிகழ்ந்தது. வள்ளலாரின் தேனிலவு திருவாசகத் தேனிலவு. வள்ளலார் திருவாசகத்துக்கே வாழ்க்கைப் பட்டவர். வள்ளலாருக்கு வாழ்க்கைப்படும் வாய்ப்புப் பெற்ற தனக்கோடி அம்மையாருக்குத் திருவாசகமே உபதேசமாக அமைந்தது.

திருமணமானாலும் அவர் தம் துணையோடு கலக்கவில்லை. வள்ளலாரே இதை வர்ணிக்கிறார்.

...ஒருசார் மடந்தையர் தமக்குள்

ஒருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்

குனித்த மற்றவரைத் தொட்டனன் அன்றிக்

கலப்பினேன்...

மணம் புரிய நேர்ந்ததைக் குறித்து பெருமானின் மனம்

வருந்தியதென்பதும், மண நிகழ்வை நினைத்த போதெல்லாம் மனம் வருந்தி உடைந்தார் என்பதும் இந்தப்பாடலின் மூலம் புரிகிறது.

வள்ளலாருக்கு வாழ்க்கைப்படும் வாய்ப்பைப் பெற்ற தனகோடியம்மாள், வள்ளலாரையே தெய்வமாகக் கொண்டு திருவாசகம், திருவருட்பா வழியில் மனைத் தவம் புரிந்து கொண்டிருந்து, பின்னர் உரிய காலத்தில் காலமானார். இவர்களின் இல்லற வாழ்வு குறித்த வரலாறு இவ்வளவுதான்.




# வடிகால் தந்த வடலூர்

'**த**ருமமிகு சென்னை' என்று ஒரு காலத்தில் பாடிய ராமலிங்கர், ஒரு கட்டத்தில் அதன் போக்குப் பிடிக்காமல் 'தேட்டிலே மிகுந்த சென்னை' என்று பாடத் தொடங்கினார்.

நாள்தோறும் திருவொற்றியூர் சென்று வழிபடுவதும், இடையிடையே சென்னையை அடுத்துள்ள பிற தலங்களுக்கு சென்று வழிபடுவதும், தம்மை தேடிவருபவர்களுக்கு இலக்கண, இலக்கிய, நீதி, ஞான நூல்களைக் கற்றுத் தருவதும், சிறுவர்க்கு கல்வி பயிற்றுவிப்பதும், நூல் செய்வதும், உரை எழுதுவதும், வியாக்கியானம் செய்வதுமாக அவருடைய நாள்கள் சென்றன. அதே சமயம், சென்னையில் இப்படி ஒரு வித்வானாக இருப்பது வள்ளலாருக்கு இசைவானதாக இல்லை. ஞான வாழ்வை விரும்பிய அவரால் வித்வான் வாழ்க்கையை ஏற்றுக் கொள்ள இயலவில்லை.

ஆரவாரம் நிறைந்த சென்னை வாழ்வை அவர் வெறுத்தார்.

ஆடம்பரங்களும் அலங்கோலங்களும் அவருக்கு அறுவெறுப்பைத் தந்தன. சென்னைக்கு வெளியே உள்ள ஊர்களில், சுற்றியுள்ள வயல் காடுகளில், தோட்டங்களில் காலங்கழிக்கத் தொடங்கினார். பகலில் இப்படி வெளியிடங்களில் சுற்றித் திரிந்துவிட்டு இரவில் மட்டும் வீடு திரும்புவார்.

சென்னை வித்வான்களில் சிலர் அடிக்கடி ஏதாவது வாதத்தில் ஈடுபட்டு, தங்கள் சந்தேகத்தைத் தீர்க்க வள்ளலாரை தேடிவந்தார்கள். இந்தத் தொந்தரவு தினமும் வரத்தொடங்கியது.

ஏழுகிணறு பகுதியில் இருந்த துலுக்காணத்தம்மன் மீது பாடவேண்டும் என்றால் பலி கொடுப்பதை நிறுத்த வேண்டும் என்று சாதாரண மக்களைச் சம்மதிக்க வைத்து விட்டார். ஆனால் ஆணவத்தையும், வெற்று புலமையையும் பலி கொடுக்கிறோம் என்ற வாக்குறுதியைப் புலவர்களிடமிருந்து அவரால் வாங்கமுடியவில்லை.

தன்னுடைய வாழ்வின் முக்கியமான கட்டத்தை நோக்கிப் பயணத்தை ஆரம்பித்தார் வள்ளலார். அவருடைய கருத்துகளுக்கும் கொள்கைகளுக்கும் சரியான வடிகாலைக் கொடுக்கத் தயாராக இருந்தது வடலூர். வழியிலுள்ள தலங்களை வழிபட்டு தான் பிறந்த மருதூரை அடைவதெனத் தீர்மானித்தார் வள்ளலார். சிதம்பர சுவாமிகள், சடை சுவாமிகள், வீராசாமி நாயக்கர், தொழுவூர் வேலாயுத முதலியார் போன்றவர்கள் புடை சூழ சென்னையை விட்டு, வண்டிப் பாதை வழியாக 1858-ஆம் ஆண்டு மருதூர் நோக்கிப் புறப்பட்டார் ராமலிங்கர்.

ஆரம்பத்திலிருந்தே வள்ளலாரின் ஆன்மிகத் தேடலுக்கு உறுதுணையாக அமைந்தவை கோயில்கள். கவிதைப் பெருக்கும், கடவுள் மீதான காதலும் கந்தக் கோட்டத்தில் ஊற்றெடுத்தன. திருவொற்றியூரில் அவை ஆறாகப் பெருகின. திருத்தணிகை மலையிலிருந்து அருவியாகப் பாய்ந்தன.

சென்னைப் பட்டணத்தை விட்டு தில்லையை இலக்காகக் கொண்டு கிளம்பி, வழியில் உள்ள கோயில்களை வழிபட்டுக் கொண்டே வந்தார் வள்ளலார்.

வைத்தீஸ்வரன் கோவில் எனப்படும் புள்ளிருக்குவேளூர் தலம் பாடல் பெற்ற 275 தலங்களுள் பதினோராவதாகத் திகழ்வது. தற்போதைய நாகை மாவட்டம் சீர்காழி வட்டத்தில் உள்ளது. தருமபுர ஆதினத்தின் நிர்வாகத்தில் உள்ள இத்தலத்தில் வைத்தியநாதரும், தையல்நாயகியும் கடவுள்களாக உள்ளனர். வைத்தியநாதரை வணங்கிய வள்ளலார், ‘நல்ல மருந்திம் மருந்து – சுகம் நல்கும் வைத்தியநாத மருந்து’ – என்று ராகம் போட்டுத் தேனினும் இனிமையாகப் பாடினார்.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரி நாதர், குமரகுருபர், போன்றோர் இத்தலத்தை வழிபட்டுப் பாடியுள்ளனர். இரண்டு பதிகங்களாலும், ஒரு மாலையாலும், ஒரு கீர்த்தனையாலும் இரு தனிப்பாடல்களாலும் இத்தலத்தைப் போற்றியுள்ளார் வள்ளலார்.

சோழ நாட்டில் காவிரியின் தென் கரையில் அமைந்துள்ள திருவாரூர் திருத்தலமும் பாடல் பெற்ற தலங்களில் ஒன்று. மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றிலும் சிறந்த இத்தலத்தில் வன்மீகநாதரும், அல்லியங்கோதையும் வீற்றிருக்கிறார்கள். சோழ மன்னர்களின் தலைநகரங்கள் ஐந்தில் இதுவும் ஒன்று. தன்மகன் ஏறிச்சென்ற தேரில் அடிபட்டிருந்த பசுங்கன்றுக்காகத் தன் மகனையே தேர்க்காலிலிட்டுக் கொன்று நீதிவழங்கிய மனுநீதிச் சோழன் அரசாண்ட தலம். ‘வழிபாட்டுப் பாமாலை’ ஒன்றைப் பாடி கடவுளை வணங்கினார் வள்ளலார்.

திருவாரூரில் தரிசனம் செய்துவிட்டு, வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் திரும்பும்போது திருக்கண்ணமங்கை என்ற ஊர்வந்தது. அன்றிரவு ஒரு செல்வந்தர்வீட்டில் தங்கினார். வைணவத் தலமாகிய திருக்கண்ணமங்கையில் உள்ள

அபிடேகவல்லி அம்மாளின் துதி பாடினார் வள்ளலார்.

அங்கிருந்து சிதம்பரம் வந்தார் வள்ளலார். அவரை கருங்குழி கிராமத்து மணியக்காரரான வேங்கட ரெட்டியார், தன்னுடைய இல்லத்தில் வந்து தங்குமாறு அழைத்தார். அவருடைய அழைப்பை ஏற்ற வள்ளலார், கருங்குழிக்குச் சென்று ஏறக்குறைய ஒன்பது ஆண்டுகள் அங்கே வாழ்ந் தார். தான் பிறந்த ஊரான மருதூருக்கு அடுத்த கிராமமான கருங்குழிக்கு அருகில் உள்ள வெளியில்தான் அவருடைய தருமச்சாலையையும் சபையையும் நிறுவினார்.

வேங்கடரெட்டியார் வீட்டில் ஏறக்குறைய நிரந்தரவாசம். அவருடைய இல்லத்திலேயே உணவு. தனி அறை. கருங்குழி வளமான பகுதி. வேளாண்மையில் செழித்த பூமி. கருங்குழியிலிருந்து அடிக்கடி சிதம்பரம் கோயிலுக்கும், திருமுதுகுன்றம், திருவண்ணாமலை, திருவதிகை போன்ற தலங்களுக்கும் சென்று வழிபடுவார் வள்ளலார்.

அவருடைய பல அற்புதங்களுக்கும் அறப்பணிகளுக்கும் ஆதாரமாகவும் ஆதரவாகவும் இருந்தது கருங்குழி. வேங்கடத்தின் மனைவி முத்தியாலு அம்மாள் வள்ளலாரை நன்கு உபசரித்தார். கணவன்-மனைவி இருவருமே அன்போடும் மரியாதையோடும் அவருக்கு சேவை செய்தனர்.




# தண்ணீர் விளக்கு

இரவில் விளக்கில்லாத இடத்தில் இருக்கக் கூடாதென்பது வள்ளலாரின் கொள்கை. அதனால் அவரது அறையில் இரவு முழுவதும் விளக்கு எரிந்து கொண்டே இருக்கும். வள்ளலார், இரவில் ஒரு மணி நேரம் மட்டுமே உறங்குவார். தியானம் செய்வதிலும் அருட்பாடல்களைப் பாடுவதிலும், எழுதுவதிலும் மற்ற நேரங்களைக் கழிப்பார். இரவு முழுவதும் எரிய வேண்டும் என்பதால் பெரிய அகல் விளக்கொன்று ஒரு மாடத்தில் வைக்கப் பட்டிருக்கும். ஒவ்வொரு நாள் மாலையிலும் அகலைச் சுத்தம் செய்து, எண்ணெய் இட்டு விளக்கேற்றும் பணியை முத்தியாலம்மாள் செய்வது வழக்கம்.

எண்ணெய் குறைந்தால் விட்டுக்கொள்வதற்காக எண்ணெய்க் கலம் ஒன்று விளக்கருகே வைக்கப் பட்டிருக்கும். ஒருநாள் மாலை முத்தியாலம்மாள் ஒரு புதிய மண் கலத்தில் தண்ணிர் நிரப்பி விளக்கருகே வைத்திருந்தார். பழைய எண்ணெய்க்கலத்தின் வாய்

உடைந்து போயிருந்ததால், புதிய மண்கலத்தைப் பழக்குவதற்காகத் தண்ணிர் நிரப்பி வைக்கப்பட்டிருந்தது.

அன்றைக்கு முத்தியாலம்மாள் அயலூர் சென்றிருந்தார். விளக்கு வைக்கும் நேரம் வந்தது. வள்ளலார் எண்ணெய்க் கலம் என்று நினைத்து, தண்ணீர்க் கலத்தை எடுத்து விளக்கில் ஊற்றினார். விளக்கருகே அமர்ந்து அருட்பாக்களை எழுதத்தொடங்கினார். எண்ணெய் குறையக் குறைய, தண்ணீரையே அதில் விட்டார். கடைசியாக, விளக்கில் தண்ணீரை நிரப்பிவிட்டு உறங்கினார். இரவு முழுவதும் விளக்கெரிந்தது. விளக்கில் ஊற்றியது தண்ணீர் என்பது வள்ளலாருக்குத் தெரியாது.

மறுநாள் காலை முத்தியாலம்மாள் ஊர் திரும்பினார். வள்ளலாரின் அறைக்கு வந்தார். விளக்கில் எண்ணெய் இருந்தது. பழைய எண்ணெய்க் கலயத்தில் வைத்திருந்த எண்ணெயின் அளவும் அப்படியே இருந்தது. ஆனால் தண்ணீர்க் கலத்தில் தண்ணீரின் அளவு குறைந்திருந்தது.

‘ஏன் சாமி! ராத்திரி விளக்கு எரிந்ததா?’ என்றார். ‘விடிய விடிய எரிந்ததே’ என்றார் வள்ளலார். வியப்படைந்த அம்மையார் ‘எந்தக் கலயத்திலிருந்து எண்ணெய் ஊற்றினர்கள்?’ எனக் கேட்டார். ‘இதோ இதிலிருந்துதான்’ என வள்ளலார் தண்ணீர்க் கலயத்தைக் காட்டினார். வியந்துபோனார் அம்மையார். வீட்டிலுள்ள எல்லோரிடமும் நடந்ததைக் கூறினார்.

வள்ளலார் கருங்குழியில் இருந்து அடிக்கடி தில்லைக்குச் சென்று நடராஜரை தரிசிப்பார். சிதம்பரம் பொருளாக அவர் எழுதிய பாமாலைகள் பல. பழைய நான்காம் திருமுறையிலும், ஆறாம் திருமுறையின் முன்பகுதியிலுமாக அந்தப் பாமாலைகள் உள்ளன.

சிதம்பரத்தில் சில சீர்திருத்தங்கள் செய்ய வள்ளலார் எண்ணியிருந்தார். சிதம்பரம் கோயிலுக்கு ஒரு திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்து, அதிலிருந்த

வைதீகப் பூசையைப் பழையபடி ஆகமப் பூசையாக மாற்ற நினைத்தார். அது முடியாமல் போகவே, வடலூரில் புதிதாக 'உத்தர ஞான சிதம்பரம் சத்திய ஞான சபை' என்ற ஒன்றை நிறுவினார்.

பஞ்சாட்சரப் படியேறி பூஜை செய்யும் உரிமை தமக்கு வேண்டும் என்று தீட்சிதர்களிடம் வள்ளலார் கேட்டதாகவும், அவர்கள் அதற்கு உடன்படாததால் தான் வடலூர் மீது அவர் கவனம் செலுத்தியதாகவும் கூறப்படுகிறது. வடலூரில் வள்ளலார் அமைத்த நிறுவனங்கள் காலத்தின் கட்டாயங்கள். அவற்றுக்கு வலுவான சமூகக் காரணங்கள் உண்டு.

கருங்குழி கிராமத்தில் பாலு ரெட்டியார் என்பவர் குஷ்ட நோயால் அவதிப்பட்டார். வள்ளலார் விபூதி கொடுத்து அவரை குணப்படுத்தினார். அதுபோலவே முத்து நாராயண ரெட்டியார் என்பவருடைய கண்நோயைப் போக்கினார். அவர் தம்முடைய சொத்துகளை வள்ளலாருக்குக் கொடுக்க முன்வர, அவற்றைக் கோயிலுக்கு எழுதும்படிச் செய்தார் வள்ளலார். வள்ளலார், நோய் தீர்க்கும் மருத்துவராகவும், சித்தராகவும் பலபேரின் துன்பங்களைத் தீர்த்துக் கொண்டிருந்தார்.

இக்காலகட்டத்தில்தான் வள்ளலார் சென்னையில் இருந்த இறுக்கம் ரத்தின முதலியார் உள்ளிட்ட நண்பர்களுடனும், மாணவர்களுடனும் கடிதம் மூலம் தொடர்பு கொண்டிருந் தார்.

வள்ளலார், 'சன்மார்க்கம்' என்பதற்குப் புதிய, புரட்சி கரமான பொருள் ஒன்றைக் கூறினார். 'எல்லா உயிர்களுடன் ஒன்றாகக் கலப்பது சன்மார்க்கம்' என்றார்.

இந்த உணர்வுதான் அவரை மற்ற உயிர்களை நேசிக்க வைத்தது. இதனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுவில் எல்லைகளைக் கடந்த ஒரு பரந்த கொள்கையை அவரால் காண முடிந்தது.

‘அன்பு’ ஒன்றை வைத்தே, தமிழ் நாட்டில் முதல் உலகப் பிரஜையானார் வள்ளலார்.

இந்த நிலையை அடைய அவர் ஏறிவந்த புராணம், இதிகாசம், சமயம் முதலான படிக்கட்டுகளை அவரே தள்ளவேண்டி வந்தது. இந்தியாவெங்கும் ஒரு சீர்திருத்த அலை எழுந்து கொண்டிருந்த காலகட்டத்தில் இவை எல்லாம் மிக அவசியமானவைகளாக இருந்தன. தமிழகத்தில் ஆன்மிகத்திலும், ஆலய கோட்பாடுகளிலும், சமய கோட்பாடுகளிலும் மறுமலர்ச்சி ஏற்படுத்த முயன்றார் வள்ளலார்.

இறுக்கம் ரத்தின முதலியாருக்கு வள்ளலாரின் பாடல்களைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று ஆசை.

வள்ளலாரின் முதல் பாடல் கந்தக் கோட்டத்தில் 1832-ல் பாடப்பட்டது. கந்தக் கோட்டப் பாடல்களான ‘தெய்வமணிமாலை’யும், ‘கந்தர் சரணப் பத்து’ம் 1851-க்கு முன்பே அச்சாகிவிட்டன. படிப்பதற்கு எளிமையாகவும், கேட்பதற்கு இனிமையாகவும், நினைப்பதற்கு உருக்கமாகவும் இருப்பதால், வள்ளலாரின் பாடல்களை தமிழர்கள் ஓதிப் பயனடைய விருப்பமாக இருந்தார்கள். அவரது பாடல்கள் இலக்கியச் செறிவும் கொண்டிருந்ததால் அதன் மதிப்புக் கூடியிருந்தது.

சென்னையில் சிலர் வள்ளலார் பாடிச் சென்ற அருட்பாடல்களை சிறுசிறு நூல்களாக அச்சிட்டிருந்தார்கள். அவற்றில் இலக்கணப் பிழைகளும் அச்சுப் பிழைகளும் மலிந்திருந்தன. ரத்தின முதலியாரும் செல்வராய முதலியாரும் அவர்களைப் பார்த்து, முறையாகத் தாங்கள் அவற்றை அச்சிடவிருப்பதால், அவர்கள் அச்சிடக் கூடாதெனத் தடுத்தனர். அவர்கள் ஏற்கெனவே அச்சிடத் தொடங்கிவிட்டதால் அதனை நிறுத்த சிறிதும் பொருளுதவியும் செய்தனர். சிலர் அதன் பின்னரும் நிறுத்தவில்லை.

இந்நிலையில் இறுக்கம் ரத்தின முதலியார் பாடல் ஏடுகளைத் தொகுப்பதிலும், அவற்றை அச்சிடுவதற்கு வள்ளலாரிடம் இசைவு பெறுவதிலும் தீவிரமாக முனைந்தார். திருவருட்பா ஏடுகளைத் தொகுத்து அச்சிடுவது குறித்து 1860-முதலே ரத்தினத்துக்கும் வள்ளலாருக்கும் கடிதத் தொடர்பு தொடங்கிவிட்டது.

பாடல் ஏடுகளை அனுப்பிவைக்கும்படி ரத்தினம் பலமுறை வேண்டியும் வள்ளலார் பாராமுகமாக இருந்தார். பாடல்கள் அச்சாவதில் அவருக்கு ஆர்வமோ, விருப்பமோ இல்லை. ஒரு கட்டத்தில், பாடல் ஏடுகள் அடங்கிய தபால் கட்டுரைகள் வந்து சேரும் வரைதாம் ஒரு வேளை உணவு உண்ணும் முடிவுக்கு வந்துள்ளதாக ரத்தினம் வள்ளலாருக்கு கடிதமெழுதினார்.

சாதாரணமாகவே பசியுடன் யாரும் வாடக் கூடாது என நினைக்கும் வள்ளலார், நெருக்கமானவர் பட்டினியில் கிடக்க எப்படி சம்மதிப்பார்? உடனே வள்ளலார், இரண்டு மாதங்களில் பாடல் ஏடுகளை அனுப்புவதாகவும், பாடல்களைப் பெறும் வரை ஒருவேளை உணவு நோன்பைத் தவிர்க்கும்படியும், அப்படியான ஒரு உறுதியை அஞ்சலில் தமக்கு அனுப்பும்வரை தாமும் ஒருவேளையே உண்பதாகவும் ரத்தினத்துக்குக் கடிதம் அனுப்பினார்.

ஆனாலும், நோன்பு அறிவித்த 1860-க்குப் பிறகு ஐந்து ஆண்டுகள் ஆகியும் எல்லாப் பாடல்களும் கிடைத்த பாடில்லை. அச்சிடுவதற்கு வள்ளலாரின் இசைவும் கிடைக்கவில்லை. இனியும் தாமதிக்க இயலாதென்றும், அச்சிடுவதற்கு இசைவளித்தே ஆகவேண்டுமென்றும் வற்புறுத்தி 1865 நவம்பர் 13-ஆம் தேதியன்று மீண்டும் கடிதம் ஒன்றைப் பதிவுத் தபாலில் அனுப்பினார் ரத்தினம். அக்கடிதத்தைப் பெற்ற வள்ளலார், ‘தன்னுடைய பாடல்கள் வெளிவருவதில் தனக்கு அவ்வளவாக விருப்பமில்லையென்றும், இறைவன் உள்ளிருந்து பாட வைத்தவைகளை மட்டும் அச்சிட்டுக் கொள்ளலாம்’ என்று மடலெழுதினார்.

1866- மார்ச் மாதம் இறுக்கம் ரத்தின முதலியார் வள்ளலாருக்கு எழுதிய கடிதத்தில் அச்சிலிருக்கும் திருவருட்பாவின் முகப்பேட்டில் பெயரை 'ராமலிங்க சுவாமிகள்' என்று குறிப்பிட அனுமதி வேண்டினார். அத்துடன் சிதம்பரம் கோயிலில் அண்மையில் பாடிய பாடல்களையும் அச்சிட அனுப்ப வேண்டினார். சிதம்பர விஷயத்தில் தோத்திர மாலைகளும், சாத்திர மாலைகளுமாகச் சுமார் இருநூறு மாலைகள் பாடப்பட்டுள்ளன என்றும் அவற்றைப் பின்னர் வெளிப்படுத்திக் கொள்ளலாமென்றும் 'ராமலிங்க சுவாமி' என்று போடுவதில் தனக்குச் சம்மதமில்லையென்றும் பதிலெழுதினார் வள்ளலார்.

ஆனால் தொழுதூர் வேலாயுத முதலியாருக்கும் மற்றவர்களுக்கும் 'சிதம்பரம் ராமலிங்கம்' என்று அவரைக் குறிப்பிடுவதில் விருப்பமில்லை. 'ராமலிங்கர்', 'ராமலிங்கர்' எனக் கூறி ஞான வாழ்வில் மேம்பட்டவர்கள் அவரை 'அருட்பிரகாச வள்ளலார்' என அழைத்து திருவருட்பா வரலாறை வெளியிட்டனர்.

பெயர் சூட்டியதோடு, தேவாரம், திருமுறைகளாகப் பிரிக்கப்பட்டிருப்பது போல் ராமலிங்கரின் பாடல்களை திருமுறைகளாக வகுத்து 'திருவருட்பா' என்று பெயரிட்டனர்.

ஆறுதிருமுறைகளாக வகுக்கப்பட்ட திருவருட்பாவின் முதல் நான்கு திருமுறைகள் முதல் புத்தகமாக 'திருவருட்பிரகாச வள்ளலார்' என்னும் 'சிதம்பரம் ராமலிங்கம் பிள்ளை' அருளிய 'திருவருட்பா' என 1867 பிப்ரவரியில் வெளியானது.




# சன்மார்க்க சங்கம்

**1865** -ஆம் ஆண்டில் வள்ளலார் சன்மார்க்க சங்கத்தை அமைத்தார். சங்கம் நமக்குப் புதிதல்ல. சங்கம் வைத்து மொழி வளர்த்தவர்கள் நம் முன்னோர். அக்காலத்தைச்சங்க காலம் என்றே வழங்குகிறோம். தமிழையும் சங்கத்தமிழ் என்கிறோம். மொழிச் சங்கம் பழைமையானது. ஆனால் ஆன்மிக சங்கமோ முற்றிலும் புதிதானது. தமிழகத்தில் ஆன்மிகத்திற்கென முதன்முதலில் சங்கம் அமைத்தவர் வள்லார்.

கடவுள் ஒருவர். ஒருவராகிய அந்தக் கடவுளை உண்மை அன்பால் ஒளி (ஜோதி) வடிவில் வழிபட வேண்டும். சிறுதெய்வ வழிபாடு கூடாது. கடவுள் பெயரால் உயிர்ப்பலி கூடாது. புலால்(மாமிசம்) உண்ணக் கூடாது. சாதி சமயம் முதலிய எவ்வகை வேறுபாடும் கூடாது. எவ்வுயிரையும் தம் உயிர் போல எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு நிலையைக் கைக்கொள்ள வேண்டும். ஏழைகளின் பசி தவிர்த்தலாகிய ஜீவகாருண்யமே பேரின்ப வீட்டின்

திறவுகோல். புராணங்களும் சாஸ்திரங்களும் முடிவான உண்மையை தெரிவிக்காது. இறந்தவர்களை புதைக்க வேண்டுமே தவிர எரிக்கக்கூடாது. கருமாதி, திதி போன்ற சடங்குகளைச் செய்யக்கூடாது. ஆகியவை வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்க கொள்கைகளில் முக்கியமானவை.

இக்கொள்கைகளைப் பின்பற்றவும், உலகெங்கும் பரப்பவும் வள்ளலார் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' என்ற சங்கத்தை நிறுவினார். அப்போது அதற்கிடப்பட்ட பெயர் 'சமரச வேத சன்மார்க்க சங்கம்'. பிற்காலத்தில் அதிலிருந்த 'வேத' நீக்கப்பட்டு 'சுத்த' என்பது இணைக்கப்பட்டு 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்' என மாறுபட்டது.

இதேபோல் 1867-ல் நிறுவப்பெற்ற 'சமரச வேத சன்மார்க்க சத்திய தருமச்சாலை', பின்னர் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச் சாலை' எனவும், 1872- ல் நிறுவப்பெற்ற 'சமரச வேத சன்மார்க்க சத்திய ஞான சபை', பின்னர் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான சபை' எனவும் வள்ளலாராலேயே 1872-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 18-ஆம் நாள் பெயர்கள் மாற்றப்பட்டு, வழிபாட்டுக்குரிய விதிகள் வகுத்தளிக்கப்பட்டன.

சமரச வேத சன்மார்க்க சங்கம் தொடங்கப்பட்ட இரண்டு ஆண்டுகளில் அதன் அபிமானிகளான புதுவை வேலு முதலியார், சிவானந்தபுரம் செல்வராய முதலியார், இறுக்கம் ரத்தின முதலியார் ஆகியோர், அந்த சங்கத்தின் வித்வான்களின் ஒருவரான வேலாயுத முதலியாரைக் கொண்டு, வள்ளலாரின் பாடல்களை அவற்றிற்குரிய மரியாதையுடன் கொண்டு வந்து விட்டார்கள். மூன்று ரூபாய் விலை வெளியிடப்பட்ட அந்த 'திருவருட்பா' நூல் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் கிடைக்கும்படி ஏற்பாடுகளும் செய்தனர்.

'திருவருட்பா' வெளியிடப்பட்ட அதே ஆண்டு 1867- மே மாதம் சமரச வேத சன்மார்க்க சத்திய தருமச்சாலையை' வள்ளலாரும், அன்பர்களும் தொடங்கினர். சன்மார்க்க

சங்கம் சார்பில் தொடங்கப்பட்ட இந்த 'தருமச்சாலை' சங்க அடியார்களாலேயே நடத்தப்பட்டது.

இவ்வாறு கருங்குழியில் தங்கி, சன்மார்க்க சங்கம் கண்டு அவ்வப்போது சிதம்பரம் சென்று வழிபடவும், மீளவுமாக இருந்த வள்ளலார் தம்மை எப்போதும் சூழ்ந்திருக்கும் கூட்டத்தைத் தவிர்க்க விரும்பிச் சில காலம் அயலிடங்களுக்குச் சென்று தங்கினார். சங்கம் நிறுவிய அடுத்த ஆண்டிலிருந்து அப்படி அவர் கூடலூர்(கடலூர்) சென்று தங்குவது தொடர்ந்தது.

கூடலூர் அப்பாசாமி வள்ளலாரின் சீடர். இவரது தமையனாருக்கு நாக்கில் புற்றுநோய். அப்பாசாமி செட்டியாரின் வேண்டு கோளுக்கிணங்க வள்ளலார், மூன்று வேளை பூசுமாறும், உட்கொள்ளுமாறும் திருநீறு வழங்கினார். அவரும் அப்படியே செய்ய, புற்று நீங்கிக் குணமடைந்தார்.

வள்ளலார் கூடலூர் செல்லும் போதெல்லாம் அப்பாசாமி வீட்டில் தங்குவது வழக்கம். அப்பாசாமி வீடு தேரடிக்கருகில் இருந்தது. ஒருமுறை வள்ளலார் அங்கு தங்கியிருந்தபோது பங்குனி உத்திரத்தை முன்னிட்டு கிண்ணித் தேர்த் திருவிழா நடைபெற்றது. அப்பாசாமி வீட்டுக்கு வந்தவர்கள் திண்ணையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது ஒளிவீசும் தோற்றத்துடன் ஒருவர் வேகமாக வீட்டுக்குள் நுழைவதைப் பார்த்தார்கள். உடனே சிலர் அவர் பின்னால் ஓடினர். ஆனால் வீட்டுக்குள் வள்ளலார் மட்டுமே இருந்தார். அவர் முன்பு ஒரு லட்டு இருந்தது. அந்த லட்டை சிறிதளவு சுவைத்துவிட்டு, அவர்களுக்கும் கொடுத்தார் வள்ளலார். 'வந்தவர் யார்?' என்று கேட்டதும், 'ஒரு சித்தர் வந்தார், லட்டு கொடுத்தார். அவர் இந்நேரம் காசியில் இருப்பார்' என்றார் வள்ளலார்.

வள்ளலார் கடலூருக்கு வருவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே கடலூர் தேவநாயகம் பிள்ளை என்பவரின் தந்தை

அவருடைய வருகையை அறிந்திருந்தாராம். யோகியான அவர் தம் உயிர் பிரியும் தறுவாயில் தன் மகனை அழைத்து, ‘யார் முக்காடு போட்டு, கையில் பிரம்பு வைத்துக் கொண்டு, இதுதானா உன் தகப்பன் வியோகஸ்தலம்? என்று கேட்கிறாரோ, அவர்தான் உன்னுடைய குரு’ என்று சொல்லிவிட்டு, இறந்தாராம். மூன்று ஆண்டு கழித்து தேவநாயகம் வீட்டிற்கு வந்த வள்ளலார் அதேபோல, பிரம்பால் தட்டிக்காட்டி கேட்டார். அன்றுமுதல் தேவநாயகம் வள்ளலாரை குருவாக ஏற்றுக் கொண்டார்.

இந்த தேவநாயகத்துக்கு ரசவாதத்தில் ஈடுபாடு. அதற்காக அவர் அதிகமான பணம் செலவழித்தார். இதை அறிந்த வள்ளலார், ஒரு நாள், அவரிடம் இரும்புத் தகட்டை தங்கமாக மாற்றிக் காட்டினார். அந்தத் தங்கத்தை தூக்கி எறிந்துவிட்டு ‘இது ஆசையற்றவர்களால்தான் முடியும். இனியும் இதில் நீ மயங்காதே’ என்று அறிவுரை கூறினார்.

மஞ்சக் குப்பத்திலிருந்த தாசில்தார் வேங்கட சுப்பையர் நாள்தோறும் வள்ளலாரின் உபதேசங்களைக் கேட்க கடலூருக்கு வருவார். அவரது வண்டிக்கு முன்பு சக்கிலிய இனத்தைச் சேர்ந்த ஒருவர், ஊதுகொம்பு ஊதிக் கொண்டு ஓடிவருவது வழக்கம். ஒருநாள் மிக வேகமாக ஓடி வந்ததால் பசித்துக் களைத்த அவனது உடல் நடுங்கியது. அன்றைக்கு வேங்கடசுப்பு கூட்டத்துக்கு வந்தவுடன் வழக்கம் போல் வள்ளலார் அவரிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை.

சற்றுநேரம் கழிந்ததும், ‘இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு இருக்கும். கொம்புக்காரனை போகவேண்டிய இடத்துக்கு முன்னமே அனுப்பி சிறிதுதுரம் முன்னிருந்து ஊதினால் போதாதா?’ என்றாராம் வள்ளலார். தாசில் தாரும் அப்படியே செய்வதாகக் கூறி மன்னிப்பு வேண்டினார். பசித்துக் களைத்திருந்த அந்தக் கொம்பூதும் தொழிலாளிக்கு உணவளிக்க ஏற்பாடு செய்த பிறகுதான் வள்ளலார் அன்றைய உபதேச உரையைத் தொடங்கினார்.

ராஜாராம் மோகன்ராய் சீர்திருத்தவாதி. அவர் இறந்து

விட்டபோதும் அவர் தொடங்கிய பிரம்ம சமாஜத்தின் கிளை அப்போதைய சென்னை மாகாணத்தில் இருந்தன.

இந்த அமைப்பைச் சேர்ந்த சம்பேரு ஸ்ரீதர நாயக்கர் என்பவர் உருவ வழிபாட்டுக்கு எதிரான பிரசாரத்தைப் பல இடங்களில் மேற்கொண்டிருந்தார்.

1967-ம் ஆண்டு ஜனவரி மாதம் 16-ம் நாள் திருப்பாதிரிப் புலியூருக்கு அருகில், பெண்ணை நதியின் தென்கரையில் பிரம்ம சமாஜத்தின் விழா நடந்து கொண்டிருந்தது. வள்ளலாரும் அங்கு சென்றிருந்தார். ஸ்ரீதர நாயக்கர் பிரம்ம சமாஜத்தின் கோட்பாடான உருவ வழிபாடு எதிர்ப்புக் குறித்து விளக்கவுரை ஆற்றினார். உருவ வழிபாட்டை எதிர்த்து அவர் கூறிய கருத்துகளைக் கேட்டு குழப்பமடைந்த சிலர் அது பற்றி தெளிவு பெற வள்ளலாரை அணுகினார்கள். ஸ்ரீதர நாயக்கருக்கும் வள்ளலாருக்கும் உருவ வழிபாடு குறித்து வாதம் மூண்டது.

பிரம்ம சமாஜத்துக்கும் சன்மார்க்க சங்கத்துக்கும் நோக்கங்களில் அதிகம் வேறுபாடில்லை. ஆனால், உருவ வழிபாடு அப்படி ஒன்றும் இகழ்வானதில்லை என்பது வள்ளலாரின் கருத்து.

மக்களோடு மக்களாகப் பழகி, அவர்களின் உணர்வுகளுக்கு ஏற்றபடி வாழ்ந்தார் வள்ளலார். கூடலூரில் இருந்தபோது அன்பர்கள் தங்கள் வீட்டு நிகழ்ச்சிகளுக்கு அவரை அழைத்து வந்து மகிழ்ந்திருக்கிறார்கள். அவரும் மகிழ்ச்சியோடு பங்கேற்றிருக்கிறார்.




# சத்திய தருமச்சாலை

**நா**ட்டின் பல பகுதிகளிலும் பஞ்சம் தலைவிரித்தாடிய காலகட்டம். இந்தியாவில் விளைந்த அரிசியும் கோதுமையும் இங்கிலாந்துக்கு ஏற்றுமதியாகிக் கொண்டிருந்தன. பஞ்சம் தலைவிரித்தாடிய இடங்களில் நிலவரிகளைத் தள்ளுபடி செய்ய ஆட்சியாளர்களுக்கு விருப்பமில்லை. நிலவரி செலுத்த இயலாத விவசாயிகளை தாசில்தாரும் அவரது ஆட்களும் சித்திரவதை செய்யத் தொடங்கினார்கள். கொள்ளை லாபம் ஒன்றே கம்பெனியின் கொள்கையாக இருந்தது. பருவமழை பெய்தாலும் பொய்த்தாலும், விளைச்சல் இருந்தாலும் இல்லை என்றாலும் வருவாய்த்துறை விவசாயிகளைக் கசக்கிப் பிழிந்தது.

இந்திய ஏற்றுமதிக்கு அதிக வரி, இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாகும் பொருள்களுக்கு குறைவான வரி என்ற கொள்கையின் காரணமாக இந்திய நெசவாளர்கள் நலிந்து போனார்கள்.

சென்னை மாகாணத்தில் மேற்கொள்ளப்படவேண்டிய பொதுப்பணிகள் குறித்து 1851-ல் அமைக்கப்பட்ட ஆணையம் ஏரிகளைச் செப்பனிடுவதற்கு பல ஆண்டு களாக நிதி ஒதுக்கீடுகள் இல்லாத காரணமாக, பாசனப் பகுதிகளில் நிலப்பரப்பு பாதியாகக் குறைந்துவிட்டதென அறிவித்தது. அதிகப்படியான வரிவிதிப்பால் ஏற்கெனவே தள்ளாட்டம் கண்டிருந்த வேளாண் நிலங்கள் தரிசான நிலையில் பஞ்சம் வராமல் என்ன செய்யும்?

ஏழைகளின் பசித்துயரத்தைக் கண்டு வள்ளலார். ‘என் உள்ளம் எரிகிறது, உடம்பும் எரிகிறது’ என்கிறார். பசிக்கொடுமையே சகல துன்பங்களுக்கும் காரணம் என்பது வள்ளலாரின் கண்டுபிடிப்பு.

அந்த நூற்றாண்டின் பயங்கர உயிர்கொல்லியான பஞ்சத்துக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கியவர் வள்ளலார். சமூகத்தின் பலமட்டங்களிலும் இருப்பவர் களை இணைத்து தரும சாலைக்கு இலவசமாக நிலம் வாங்கினார். கருங்குழியை உறைவிடமாகக் கொண்டு இருந்த அவர் வடலூருக்கு அடுத்தாற்போல அதன் தென்புறமுள்ள கூடலூர்-திருமுதுகுன்றம் (விருதாச்சலம்) சாலையில் பெருவெளியைத் தேர்வு செய்தார். அந்த இடத்தின் நில உரிமையாளர்கள் நாற்பது பேர் கையொப்பமிட்ட எண்பது காணி நிலத்தை வள்ளலாருக்கு தருமச்சாலை கட்டுவதற்காகக் கொடுத்தனர்.

சமரச வேத சன்மார்க்க சங்கம் எனச் சங்கத்துக்கு பெயரிடப்பட்டது போலவே சாலைக்கும் தொடக்கத்தில் ‘சமரச வேத தரும சாலை’ என்றே பெயரிடப்பட்டது பின்னாளில் ‘சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை’ என மாற்றப்பட்டது.

வடலூரை சுற்றியுள்ள ஊர்களிலிருந்தும் கடலூர், புதுச்சேரி, சென்னை போன்ற நகரங்களிலிருந்தும் வந்திருந்த ஆயிரக்கணக்கான மக்கள் கூடிநிற்க முன்னரே கட்டி முடிக்கப்பட்டிருந்த தற்காலிக மண் கட்டடத்தில் தருமச்சாலை

23.05.1867-ல் சிறப்பாக தொடங்கப்பட்டது. நிலையான செங்கல் கட்டடங்கள் கட்டஅடிக்கல் நாட்டப்பட்டது. கிணறு தோண்டும் பணியும் தொடங்கப்பட்டது. ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு அன்று அன்னம் வழங்கப்பட்டது.

வள்ளலார் இயற்றிய ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் பல பகுதிகள் அன்று வாசித்துக் காட்டப்பட்டன. மனிதப்பிறவி எடுத்தவன் கடவுளை அறிந்து பேரின்பம் அடைய வேண்டும். கடவுளின் அருளைப் பெற்றால் தான் அது நடக்கும். கடவுளின் அருளைப் பெற ஜீவகாருண்யம் ஒன்றே வழி. மற்ற உயிர்களுக்கு தயவு காட்டுவதன் மூலம் மனிதன் கடவுள் தயவைப் பெறுகிறான். இந்தத் தயவு மார்க்கத்தின் முக்கிய அம்சம் எந்த வகையிலும் ஆகாரம் இல்லாத ஏழைகளின் பசியைப் போக்குதல். தருமச் சாலையில் சாதிசமய வேறுபாடுகளுக்கு இடமில்லை. சாலைக்கு வருவோர் அனைவருக்கும் எவ்வித வேறுபாடுமின்றி உணவளிக்கப்பட்டது. இன்றும் உணவளிக்கப்பட்டு வருகின்றது.

சாலையை நிறுவியபின் வள்ளலார் அங்கேயே தங்கினார். புலால் உண்ட பலரை வள்ளலார் மீட்டார்.

வடலூர் சேரிக்குடியிருப்பில் அமாவாசை என்பவர் இருந்தார். அவர் சேரியின் தலைவர். அவரை அழைத்து இறந்த மாடுகளைத் தின்னாமல் புதைக்கும்படி வள்ளலார் சொன்னார். அமாவாசையும் அப்படியே செய்தார். சிலநாள் கழித்து மீண்டும் அமாவாசையை அழைத்தார். ‘இனி எவ்வகை புலாலையும் உண்ணாதே’ என்றார்.

அமாவாசை, ‘சேரியில் என் பங்குக்கு வரும் மாமிசத்தை விட்டுவிட்டால் நான் என்ன செய்வது, நாள்தோறும் என் செலவுக்கு அரை ரூபாயாவது வேண்டுமே?’ என்றார். உடனே வள்ளலார் அரை ரூபாய் ஒன்றை மஞ்சள் துணியில் முடிந்து கொடுத்து, ‘இதைப் பெட்டியில் வைத்துக் கொள். நாள்தோறும் எட்டணா வருமானம் கிடைக்கும்’ என்றார். அமாவாசையும் அப்படியே செய்ய, அன்று முதல் தினமும்

அரை ரூபாய் அவருக்குக் கிடைத்தது. அதனால் அமாவாசையும் புலால் உண்பதை நிறுத்திவிட்டார்.

1867-ல் வெளியான ‘திருவருட்பா’ வுக்கு மறுப்பாக ‘போலியருட்பா மறுப்பு’ என்ற கட்டுரையை ஆறுமுக நாவலர் எழுதி, மாமண்டூர் தியாகேசமு தலியார் பெயரால் 1868-ல் வெளியிட்டார். சைவராகிய ஆறுமுக நாவலருக்கு வள்ளலாரின் சமரச சன்மார்க்கம் பிடிக்கவில்லை. அருட்பா-மருட்பா வாதம் தீவிரமாக இருந்தது.

வாதத்தால் பயனில்லை என உணர்ந்த நாவலர் சிதம்பரம் கோயிலில் நடந்த ஒரு கூட்டத்தில் வள்ளலார் தம்மை தூற்றிப் பேசியதாகவும், அடிக்க திட்டமிட்டிருப்பதாகவும் ஒரு குற்ற வழக்கை கடலூர் மஞ்சக்குப்பம் நீதிமன்றத்தில் தொடுத்தார். நாவலர் வாதி, வள்ளலார் பிரதிவாதி. வள்ளலார் சார்பில் வழக்கறிஞர் யாரும் நியமிக்கப்படவில்லை. நீதிமன்றத்துக்குள் வள்ளலார் நுழைந்தபோது, மற்றவர்களைப் போல் நாவலரும் மரியாதையாக எழுந்து நின்றார், கைகூப்பினார். இதையே காரணம்காட்டி, மரியாதைக்குரியவர் மீது வழக்குப் போட்டிருக்கக்கூடாது எனக்கூறி வழக்கைத் தள்ளுபடி செய்தார் நீதிபதி.

1867-ல் தருமச்சாலையைத் திறந்தபின் ஏறக்குறைய மூன்று ஆண்டுகள் அங்கேயே தங்கினார் வள்ளலார். நாளடைவில் தருமச்சாலையில் கூட்டம் அதிகரித்தது. அது அவரது தவ வாழ்க்கைக்கு ஏற்றதாக இருக்கவில்லை. அமைதியை விரும்பிய வள்ளலார் வடலூருக்கு தெற்கே மூன்று மைல் தொலைவிலுள்ள மேட்டுக் குப்பத்தில் தங்கினார். ஒரு காலத்தில் ஆசாரியார்கள் தங்கிய ‘ஆசாரியான் திருமாளிகை’ அவருடைய தவச்சாலையாக அமைந்தது.

கருங்குழியிலும், மேட்டுக்குப்பத்திலும் வாழ்ந்தவர்கள் பெரும்பாலும் வைணவர்கள். வைணவர்கள் வாழும் ஊர்களுக்கு ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் வைணவ ஆசாரியர்கள் வந்து தங்கி குடிமக்களுக்கு

உபதேசம் செய்வர். அதற்காகக் கட்டப்பட்ட திருமாளிகை, பின்னர் ‘சித்திவளாகத் திருமாளிகை’ என்றழைக்கப்பட்டது. 1870-ல் அங்கு தங்கத் தொடங்கிய வள்ளலார் 1874-ஆம் ஆண்டு வரை அங்கிருந்தார். ‘சித்திவளாகம்’ வள்ளலார் இட்ட பெயர்.

கடவுளை அருட்பெருஞ்சோதி (ஒளி) வடிவில் கண்ட வள்ளலார் ஒளி வழிபாட்டுக்காக ‘சத்திய ஞான சபை’யை அமைக்கத் தீர்மானித்தார். வடலூர் பெருவெளிக்கு ‘உத்திர ஞான சிதம்பரம்’ என்று பெயர் சூட்டி தருமச்சாலைக்கு சற்று மேற்கே சபைக்கான இடத்தைத் தேர்ந்தெடுத்தார். வள்ளலார் கைப்பட எழுதிக் கொடுத்த நிர்மாண வரை படத்தின் படி ஜூன் 1871-ல் ஞான சபைக்கான கட்டட வேலை தொடங்கியது. சபையை எண்கோண வடிவத்தில், தாமரைப்பூ போன்ற அமைப்பில் தெற்கு திசை (சிதம்பரம்) நோக்கி இருப்பது போல் நிறுவினார். 1872-ம் ஆண்ட சனவரி 25-ஆம் நாள் தைப்பூசத்தன்று சபை வழிபாடு தொடங்கியது.

எண்கோணமாக வடிவமைக்கப்பட்ட சபைக்குள் பன்னிரெண்டு கால் மண்டபமும் அதற்குள் நான்கு கால் மண்டபமும் உள்ளன. அதற்குள் அருட்பெருஞ்சோதி தீபம் உள்ளது. தீபத்துக்கு முன்னே 6 அடி 9 அங்குல உயரமும் 4 அடி 2 அங்குல அகலமும் உள்ள ஒரு சீமைக் கண்ணாடியை அமைத்தார் வள்ளலார். கண்ணாடிக்கு முன்னே கறுப்பு, நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், வெள்ளை, கலப்பு வண்ணம் ஆகிய ஏழு திரைகள் உள்ளன. உண்மை அறிவை மறைக்கும் கோபம், காமம், ஆணவம் முதலிய திரைகள் விலகினால் மனிதன் சத்திய ஜோதியை தனக்குள் கண்டு கொள்ளலாம் என்பது இதன் தத்துவம்.

ஜோதி தரிசனத்தின்போது திரைகள் ஒவ்வொன்றாக நீக்கப்படும். ஏழு திரைகள் நீங்கியவுடன் கண்ணாடி வழியாக முழு ஜோதி தரிசனத்தைக் காணலாம். ஆண்டுக்கு ஒருமுறை தைப்பூச நாளில் பகலிலும் இரவிலுமாக ஆறுகால ஜோதி தரிசனம் காட்டப்படுகிறது. மாத பூச நாள்களில் ஆறு திரைகளை நீக்கி தரிசனம் காட்டுகின்றனர்.

ஏழாவது திரை பாதி அளவு மறைப்பதால் மாதப்பூசை தரிசனத்தில் பாதி தரிசனம்தான் தெரியும்.

சபையில் வழிபட எல்லோருக்கும் உரிமை உண்டு. ஆனால் புலால் உண்ணக் கூடியவர்கள்சபைக்கு வெளியே இருந்து வழிபடவேண்டும். மத்தளம், நாதசுரம் போன்ற இசைக் கருவிகள், தூப தீபங்கள் போன்ற ஆராதனைகள், சோறு, தேங்காய், பழங்கள் போன்ற நைவேத்தியங்கள், திருநீறு போன்ற பிரசாதங்கள் என்று ஏதும் இல்லாத வழி பாட்டு முறையை வகுத்தார் வள்ளலார். சபைக்குள்ளே யாரும் செல்லக்கூடாது. உள்ளே இருக்கும் திரி எண்ணெய் இடுவதற்கும், இடத்தை சுத்தம் செய்வதற்கும், சாதி பேதம் இல்லாமல், புலை கொலை இல்லாதவரும், மூவாசை அற்றவருமான யாராவது, தேவைப்படும்போது, சபைக்குள் நுழையலாம்.

எப்போதாவது தமக்குத் தோன்றும் காலங்களில் வடலூருக்கு வந்து சங்கத்தையும், சபையையும், சாலையையும் பார்வையிட்டு சபையை வழிபட்டு திரும்புவதும், மற்ற காலங்களில் சித்தி வளாகத்திலேயே இருப்பதும் வள்ளலாருக்கு வழக்கமானது.

சபை திறக்கப்பட்டு சில மாதங்களிலேயே விதிகள் மீறப்படுவதை அறிந்த வள்ளலார் தான் விரும்பும் தூய்மை பாதுகாக்கப்பட வேண்டும், சபை யாருடைய ஆளுகைக் கும் உட்பட்டுவிடக்கூடாது என்ற நோக்கத்துடன் புதிய விதிகளை வகுத்தார்.

முதல் திருத்தமாக சங்கம், சபை, சாலை ஆகிய மூன்று அமைப்புகளின் பெயர்களிலும் இருந்த ‘வேத’ என்ற சொல்லை நீக்கி ‘சுத்த’, ‘சத்திய’ என்ற அடைமொழிகளைச் சேர்த்தார். பழைய முறையிலிருந்து வடலூர் அமைப்புகள் மாறுபட்டவை என்று வலியுறுத்தினார்.

உள்ளே வெளிச்சம் தர, தகர விளக்கு வைத்தால் போதும், பன்னிரெண்டு வயதுக்குட்பட்ட சிறுவர் (அல்லது)

எழுபத்திரெண்டு வயதுக்கு மேற்பட்ட பெரியவர் கையில் கொடுத்து அந்த விளக்கை உட்புற வாயிலின் சமீபத்தில் வைத்துவரச் செய்யவேண்டும் என்று தூய்மைக்கு கொஞ்சம் யதார்த்தமான வழியைச் சொன்னார். இப்படிப்பட்ட சிறுவரோ, பெரியவரோ குளித்துவிட்டு தூய்மையான எண்ணத்துடன் காலில் துணி சுற்றிக் கொண்டு, மண்டியிட்டு நான்கு நாள்களுக்கு ஒரு முறை தூசுதுடைக்க வேண்டும். ஞானசபை சாவி யார் கையிலும் இருக்கக் கூடாது. அதை ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டி, அந்தப் பெட்டியை பொற் சபைக்குள் வைத்து, அந்தப்பெட்டியின் சாவியை ஆஸ்தான காவல் உத்திரவாதியாக இருக்கிறவர் வைத்திருக்க வேண்டும்.

பிரதான நோக்கங்கள் சீரியவையாக இருந்தாலும், அவை சரியாக நடைமுறைப் படுத்தப்பட வேண்டும் என்பதில் வள்ளலாருக்கு இருந்த அக்கறை இவற்றிலிருந்து புலப்படுகிறது.

சபை விவகாரங்கள் அதிருப்தியை ஏற்படுத்தியபோது, அதைப் பூட்டி சாவியை மேட்டுக்குப்பத்துக்கு எடுத்துச் சென்றுவிட்டார். அவர் மறையும் வரை சபை திறக்கப் படவில்லை. 12.04.1878-ல் நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு சித்தி வளாகத்திலிருந்து சாவி மீட்கப்பட்டு வழிபாடு மீண்டும் தொடங்கியது.

வள்ளலார் தனித்திருக்க மேட்டுக்குப்பம் சென்றாலும் நாளடைவில் சபையிலிருந்த சிலரும் இங்கு வந்து தங்கத் தொடங்கினர். சித்தி வளாகத்தில் வள்ளலார் பிரசங்கம் செய்யும்போது முட ஆட்டுக்குட்டி ஒன்று கூட்டத்தில் ஓரமாக நின்று காதை சாய்த்துக் கொண்டு பிரசங்கம் கேட்கும். பிரசங்கம் முடிந்து அன்பர்கள் சித்தி வளாகத்தை வலம் வரும்போது நொண்டிக் கொண்டே அதுவும் வலம் வரும். கருங்குழியிலிருந்து தமக்காக வரும் உணவில் கொஞ்சத்தை வள்ளலார் இந்த முட ஆட்டுக்குட்டிக்கும், முட ஆசிரியர் ஒருவருக்கும் கொடுப்பார்.

இருபக்கமும் சீமைக்கரி இரும்புச்சட்டியில் எரிந்து கொண்டிருக்க நடுவில் தியானத்தில் இருப்பார் வள்ளலார். வள்ளலார் இப்படி இருக்கும் போது ஒருமுறை குருக்கள் ஒருவர் திடீரென உள்ளே நுழைந்துவிட்டார். சட்டியில் இருந்து நெருப்பு சிதறி வள்ளலார் மீதும் குருக்கள் மீதும் விழுந்தது. வள்ளலாரின் உடலில் தீ எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. குருக்களின் விரல் புண்ணாகிப் போனது.

வள்ளலாரை நிழற்படமெடுப்பதற்காக அன்பர்கள் பலமுறை முயன்றார்கள். முடியவில்லை. சென்னையில் புகழ்பெற்ற புகைப்படக் கலைஞர் மாசிலாமணி என்பவரை அழைத்து வந்து படமெடுத்துப் பார்த்தார்கள். படத்தில் வள்ளலாரின் உருவம் பதியவில்லை. ஆடைகள் மட்டும் மங்கலாகத் தெரிந்தன. முகம், கை, கால் முதலியன படத்தில் விழவே இல்லை. வெவ்வெறு இடங்களில், வெவ்வேறு காலங்களில் வள்ளலாருக்குத் தெரிந்தும், தெரியாமலும் எட்டுமுறை படம் எடுத்த போதும் வள்ளலாரின் முழு உருவம் பதிவாகவில்லை.

வள்ளலாரின் திருவுருவப்படம் கிடைக்காது வருந்திய அன்பர்கள். அவரைப் போல மண் சிலையையாவது செய்து வைத்துக் கொள்ளலாம் என்று எண்ணி, பண்ருட்டியிலிருந்த குயவர் ஒருவரிடம் வள்ளலாரின் திருவுருவை மண்ணால் செய்து வண்ணம் தீட்டச் சொன்னார்கள். அதை வள்ளலாரிடம் காட்டினார்கள். அதை வாங்கிப் பார்த்த வள்ளலார் ‘பொன்னான மேனி மண்ணாயிற்றோ’ என்று சொல்லியபடி, பொம்மையை நழுவ விட்டார். பொம்மை தரையில் விழுந்து உடைந்தது.

மக்களை நேசித்தவர் வள்ளலார். அதே சமயம், தமிழையும் நேசித்து, சமயத்தையும் நேசித்தார். சமயம், சாதி, மதம் என்று மனிதன் உண்டு பண்ணியவை மனிதனையே பிரிக்கின்றனவே என்று அவற்றை ஒதுக்கச் சொன்னார்.

1873 கார்த்திகை மாதம் தமது அறையிலிருந்த விளக்கை

வெளியே வைத்து அதனைவழிபடுமாறு அன்பர்களுக்குக் கட்டளையிட்டார் வள்ளலார். ‘இதை தடைபடாது ஆராதியுங்கள். இந்தக் கதவை சாத்திவிடப்போகிறேன். ஆண்டவர் இப்போது தீப முன்னிலையில் விளங்குகிற படியால் உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல் ‘நினைந்து... நினைந்து’ என்னும் பாடலில் கண்டபடி தெய்வ பாவினையை இந்தத் தீபத்தில் செய்யுங்கள்’ என்றார். ஞானசபை பூட்டப்பட்டு வழிபாடு நின்று போகவே சன்மார்க்க அன்பர்கள் சித்தி வளாகத்தில் இந்தத் திருவிளக்கை வள்ளலாரின் கட்டளைப்படி வழிபாடு செய்து வந்தனர்.

அறைக்குள்ளே தனித்து தவம் இயற்றுவதும், எப்போதாவது வெளியே வருவதுமாக இரண்டு மாதங்கள் கழிந்தன. தை மாதம் வந்தது. வள்ளலார் சில நாள்கள் வெளியே இருந்தார்.

‘கடை விரித்தோம் கொள்வாரில்லை. கட்டிவிட்டோம், இப்போது இந்த உடம்பிலிருக்கிறோம். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம்” என்றார்.

30.01.1874 வெள்ளிக்கிழமை தைப்பூச நாள். முன்னிரவில் உடனிருந்த அன்பர்களை எல்லாம் அழைத்தார். ‘நான் உள்ளே பத்து பதினைந்து தினங்கள் இருக்கப் போகின்றேன். பார்த்து அவநம்பிக்கையடையாதீர்கள். ஒருக்கால் யாராவது பார்க்க நேர்ந்தால் யாருக்கும் தோன்றாது, வெறும் வீடாகத்தான் இருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார், என்னைக் காட்டிக் கொடார்’ என்றார்.

இரவு 12. அன்பர்களை அழைத்த வள்ளலார், ‘இதுவரை நான் கூறியபடி அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபட்டு உய்யுங்கள்’ என அறிவுறுத்தி அறைக்குள் நுழைந்து கதவை தாழிட்டுக் கொண்டார். அதுதான் அன்பர்கள் அவரைக் கடைசியாய்ப் பார்த்தது.

வள்ளலார் கூறிய பத்து பதினைந்து நாட்கள் கடந்தன. அவர் வெளியே வரவில்லை. சீடர்களைப் பயம் தொற்றிக் கொண்டது. கதவைத் திறந்து பார்க்கத் தைரியமில்லை.

செய்தி ஊரெல்லாம் பரவியது.

மூன்று மாதங்கள் கடந்தன. அரசாங்க விசாரணை வந்தது. வருவாய் வாரிய உறுப்பினர் ஜார்ஜ் பான்பரியும், தென் ஆற்காடு மாவட்ட ஆட்சியர் கார்ஸ்டீனும் குதிரை வண்டியில் வந்து விசாரணை நடத்தினர். அதிகாரிகள் முன்னிலையில் கதவு திறக்கப்பட்டது. அறையில் யாருமில்லை. சித்தி வளாகத்திற்கு வெளியேயும் ஆராய்ந்தார்கள்.

சந்தேகப்படும்படி எதுவும் இல்லாததால் தருமச் சாலையில் ஏழைகளுக்கு உணவளிக்கப்படுவதைப் பாராட்டி இருபது ரூபாய் நன்கொடை கொடுத்துவிட்டுச் சென்றனர்.

வள்ளலார் மறைந்து நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு சித்திவளாகத்திலிருந்து சாவி மீட்கப்பட்டு வழிபாடு மீண்டும் தொடங்கி தொடர்ந்து வருகிறது. வள்ளலார் என்கிற மகான்அன்று ஏற்றிவைத்த ஜோதியும் பசிப் பிணி போக்கும் சாலையும் இன்றைக்கும் தொடர்ந்து கொண்டு தான் இருக்கிறது. ஜோதியாக நின்று அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார் வள்ளலார்.